# கல்கி

KALKI
10.1.1971
40 காசு



அமரர் **கல்கி** எழுதிய

## மோகினித் தீவு

அடுத்த இதழில் ஆரம்பமாகிறது

எஸ்.பாலு

# 'நான் எப்போதுமே காலைச் சிற்றுண்டியில் கால்ஷி புசிக்கிறேன்.'

திகைக்காதீர்கள், கால்ஷி என்றால கால்ஷியம! கூடவே அவன் தாமிரம், பொடாஷியம், மாங்கனீஸ் மற்றும் அயோடினும் உண்கிறான். உண்மையில் அவன் காலைச் சிற்றுண்டியில் 8 முக்கியமான மினரல்களையும் 11 அத்தியாவசியமான விடமின்களையும் உட்கொள்ளுகிறான். ஆம்: இவை அனைத்துமே அவனுக்கு ஒரே ஒரு விம்க்ரான் மாத்திரையில் கிடைத்துவிடுகின்றன!

நல்ல் ஆரோக்கியம், ஆற்றல் மற்றும் சீரான உடல் வளர்ச்சிக்குத் தேவையான எல்லா விடமின்களும் கனிஜங்களும் விம்க்ரானில் அடங்கியுள்ளன. எடுத்துக் காட்டாக, எலும்புகள் உறுதியுடன் வளர கால்ஷியம் உதவுகிறது. விம்க்ரானிலுள்ள மற்ற விடமின்களும் மினரல்களும் சீரான இரத்த அமைப்புக்கு உதவுகின்றன; பசியைத் தூண்டுகின்றன; நோய்களை எதிர்க்கும் ஆற்றலை உடலுக்குத் தருகின்றன; உற்சாகத்தையும் சக்தியையும் பெருக்குகின்றன.

## விம்க்ரான்®

மல்டிபிள் விடமின்—
மினரல் டேப்லெட்டுகள்

இப்போது
வட்ட
வடிவில்

நாள் முழுவதும் உங்களை
சக்தியுடன் வைத்திருக்க
ஒரேஒரு விம்க்ரான்
மாத்திரை போதுமானது.
விலை 13 பைசா மட்டுமே!

SQUIBB® SARABHAI CHEMICALS

Shilpi VIM 39A/70 Tam

# இலவசம்

ஒரு ஜார்

விக்கோவின் **டெர்மரிக்**




விக்கோவின் **வஜ்ரடந்தி**

(எகானமி சைஸ்) வாங்கினுல் டெர்மரிக் வானிஷிங் க்ரீம் ஒரு ஜார் இலவசமாகப் பெறுவீர்கள்.




## உண்மையிலேயே இது ஒரு மகத்தான சலுகை

**விக்கோ வஜ்ரடந்தி**
ஆயுர்வேத பற்பசை

இந்த ஆயுர்வேத பற்பசை மதிப்புமிகுந்த மூலிகைகளினுல் தயாரானது. இதைத் தொடர்ந்து. உபயோகித்து வந்தால் பல் சொத்தை, பற்களில் சீழ்ரத்தம் வடிதல் நாற்றம் ஈறு வீக்கம் ஆகியவை மறையும்.

**விக்கோ டெர்மரிக்**
வானிஷிங் க்ரீம்
சந்தண நறு மணமுள்ளது.

உங்கள் நிறத்திற்கு மேலும் அழகூட்டுகிறது. சருமத்தை மென்மையாகவும் பளபளப் பாகவும் வைத்திருக்க உதவுகிறது. ஷேவிங் செய்துகொண்டபின் உபயோகிக்க அருமையானது. வெட்டு. காயங்களைக் குணப்படுத்தும்

முந்துங்கள்! இன்றே வாங்குங்கள்

ஸ்டாக்குகள் தீரும்வரை இந்தச்சலுகை

**விக்கோ லாபொரெட்டரீஸ்**
பம்பாய்-14

இலங்கை, மலேயா, சிங்கப்பூர் ஆகிய இடங்களுக்கு ஏஜண்டுள் தேவை

# கல்கி பொருளடக்கம்

சாதாரண, மார்கழி 26 ○ ஜனவரி 10, 1971



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


| சந்தா விவரம்: | ஒருவருடம் | ஆறுமாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 20-00 | ரூ. 10-00 |
| இலங்கை (இலங்கைநாணயம்) | ரூ. 21-00 | ரூ. 10-50 |
| இதர நாடுகள் | ரூ. 40-00 | ரூ. 20-00 |






# அருணைசலத்துக் கருணைலயம்

பிரம்ம — விஷ்ணுக்களும் அடிமுடி காணவொண்ணுதபடி வெப் பரம்பொருள் தீ மலையாக நின்ற திருத்தலம் அண்ணுமலை. யாரும் அணுக முடியாத அக்னி ஸ்வரூபமானதால் 'அண்ணுமலை' என்ற பெயர் ஏற்பட் டது. அங்கு அந்த ஞானக்னியின் திரு உருவாகவே வதிந்த போதிலும் அனைவரும் அணுகிப் பணிந்து நுணுகி அநுபவிக்குமாறு 'அண்ணும் மலை' யாக வாழ்ந்தவர் அண்ணல் ஸ்ரீ ரமண பகவான். ரமண பகவானைப் பற்றி எழுதுவது சாத்தியமா? எதிலும் பற்றுமல், ஆனல் அண்டபகிரண்டம் முழுவதற்கும் ஆதாரமாயுள்ள ஆகாயத்தைப் பற்றி என்ன எழுத முடியும்? சிதாகாசத்தின் மூர்த்தியாக விளங்கிய ஸ்ரீ ரமணரைத் தியானித்து தியானித்து. அந்தத் தூய வெளி நம் இதயத்திலும் சிற்றம்பலமாக விளங்குவதை அநுபவிக்கலாம்! ஜீவன் தன்னுடைய 'நான்' என்பதன் மூலையைத் தேடித் தேடிக் கண்டு கொள்வதே சாயுஜ்யம் என்பதை ஆணி அடித்தாற் போல் வாழ்ந்து காட்டியவர், உபதேசித்தவர் அவர். இந்த அநுபூதிக்குக் குறுக்குவழியும் கிடையாது, சுற்றுவழியும் கிடையாது. ஏன், 'வழியே கிடையாது' என்பார் ரமண பகவான். 'இந்த ரமணுச்ரமத்தி லிருந்து ரயில்வே ஸ்டேஷனுக்கு வழி கேட்டால் சொல்லலாம். ஆனல் ரமணுச்ரமத்துக்கே வழி கேட்டால் என்ன சொல்வது? அப்பனே, நீயே முக்தி நிலைதான். எனவே, முக்திக்கு ஏன் வழி கேட்கிருய்?' என்று அவர் கூறியதில் வேத — உபநிஷத — புராண — இதிஹாஸ பால் சமுத்திரம் அனைத்தையும் கடைந்தெடுத்த நவநீதமே உள்ளது.

ஸ்ரீ மகரிஷிக்கு இந்தத் திருவாதிரையில் 91ம் ஜயந்தி விழா கொண் டாடப்படுகிறது. மரணம் கடந்த ரமணமாகிய அமிருதம் பிறக்கவும் இல்லை, இறக்கவும் இல்லை, அதற்கு வயதும் இல்லை. ஆனலும் பக்தர்கள் மனத்தில் ஓர் அடர்ந்த சிந்தனையை உண்டாக்கிக் கொண்டு தியானிப்ப தற்கு ஜயந்தியும் திருநாளும் அவசியம்தான்.

தொன்மைப் பொருளாயினும், அன்றன்றும் நூதனமாக விளங்கும் அருணசல ஜோதி ஸ்வரூபனின் தொண்ணூற்ரேராவது ஜயந்தியில் 'போய பிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாக' நாம் அனைவரும் 'தூமலர் தூவித் தொழுது, வாயினல் பாடி, மனத்தினல் சிந்திப்போமாக'!

மலர் 30



இதழ் 24



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்

# வாய்த்தது தருணம்; நழுவ விடாதீர்!

மக்கள் சபையைக் கலைக்குமாறு ராஷ்டிரபதி பிரகடனம் வெளியானவுடன் ராஜாஜி விடுத்த அறிக்கை — எச்சரிக்கை — வருமாறு:

''பிரதமர் ஸ்ரீமதி இந்திரா காந்தி தமது மந்திரிசபை சகாக்களுடன் ஆலோசனை நடத்தியதன் பின்பு, மக்கள் சபையைக் கலைக்குமாறு ராஷ்டிரபதியை உத்தரவு பிறப்பிக்கச் செய்திருக்கிறார். விரைவிலேயே இடைக்காலப் பொதுத் தேர்தல் நடத்தத் திட்டமிடப்பட்டிருக்கிறது.

''கம்யூனிஸ்ட்களையும், அராஜகவாதிகளையும், இவர்களது வழியிலேயே செல்லும் 'சக பிரயாணி'களையும், தேசத் துரோகிகளையும் தவிர, இந்தியாவெங்கிலுமுள்ள மக்கள் அனைவரும் பிரதமரின் கொள்கைகளையும் அவரது எதிர்காலத் திட்டங்களையும் வன்மையாக ஆட்சேபிக்கவே செய்கின்றனர்.

''தமது கொள்கைகளுக்கும், தாம் எதிர்காலத்தில் செய்ய உத்தேசித்துள்ள காரியங்களுக்கும் மக்களின் ஒப்புதலைப் பெறுவதற்கே, மக்கள் சபை கலைக்கப்பட்டுப் புதுப் பொதுத் தேர்தல் நடத்தப்படுகிறது என்கிறார் பிரதமர். அவர் கோருவது போல் மக்களால் ஒப்புதல் அளிக்கப்பட்டால் அதுவே இந்தியாவின் எதிர்காலத்துக்கு மிகப் பெரிய ஆபத்தாகும். ஆரம்ப காலத்தில் எல்லாம் மென்மையாக நடப்பது போல்தான் தோன்றும். ஆனால் மக்கள் எதிர்பார்ப்பதை விட வெகு விரைவிலேயே ஆட்சியின் போக்கு வெகுவாக மாறி, அரசியல் சாஸனத்தையே கிழித்தெறிவதில் முடிந்து விடும். மக்களின் சுதந்திரங்கள் அவ்வளவும் அடியோடு பறிக்கப்படும். முடிவில் இந்தியா கம்யூனிஸ மகா சாம்ராஜ்யத்தில் இணைந்துவிடும். இடைக்காலப் பொதுத் தேர்தலில் ஸ்ரீமதி இந்திரா காந்தி கோருகின்ற மக்களின் ஒப்புதல் நிச்சயமாக இந்த விளைவில்தான் கொண்டு சேர்க்கும்.

''ஸ்ரீமதி இந்திரா காந்தியின் போக்கினால் ஏற்படக் கூடிய தீமையிலிருந்து இந்தியாவைக் காக்கும் பொருட்டு அவரை எதிர்த்துப் போராட வேண்டிய புனிதக் கடமையைப் பெற்றிருப்பவர்கள், இந்தக் கடமையை நிறைவேற்றுவதில் பூரணமாக மனம் செலுத்தி ஒன்றுசேர்ந்து போராட இயலாதவர்களாக உள்ளனர். அவர்கள் ஒன்று சேருவதில் ஏதேதோ கஷ்டங்களும் தடைகளும் இருப்பதாகக் கருதுகின்றனர். ஆனால் உண்மையில் இன்றைய அபாய நிலையில் இந்தக் கஷ்டங்களும் தடைகளும் அற்பமாகி விட்டன.

''பொதுவான இலட்சியத்தில் எதிர்க் கட்சிகள் தம்மை ஒழுங்குபட ஒருங்கிணைத்துக் கொண்டு தேர்தலுக்குப் போதிய நிதியம் திரட்ட வேண்டும்; பொது லட்சியத்துக்கு ஆதரவாக மக்களின் ஆத்ம சக்தியை எழுப்ப வேண்டும். ஆனால் இதுகாறும் எதிர்க் கட்சிகள் இப்பணிகளைச் செய்வதில் தமது இயலாமையையே காட்டி வந்திருக்கின்றன. எதிர்க் கட்சித் தலைவர்களை அவர்களது பல வீனங்களையும் சிரமங்களையும் கடக்குமாறு **செய்யக்கூடிய** அனைவரும் இதனைச் **செய்தே ஆக** வேண்டும். இதற்கு, அவர்கள் நிலைமையின் பயங்கரத்தை என்னைப் போல் தீவிரமாக உணரவேண்டும். உணர்ந்து, சந்தர்ப்பத்தின் தேவைக்கு ஏற்ப எழுச்சி கொள்ளவேண்டும். இவர்கள் இப்போது பூரண உதவி செய்வதில் தயக்கம் காட்டுவதால் எதைச் சேமிக்கலாம் என நம்புகிறார்களோ — எந்த லாபத்தைப் பெறலாம் என நம்புகிறார்களோ — அந்தச் சேமிப்பும் லாபமும் வருங்காலத்தில் அடியோடு பயனற்ற துரும்புகளாகி விடும்.

''வலுவான ஐக்கியத்தையும் தியாகங்களையும் கூவி அழைக்கிறது இன்றைய நெருக்கடி. இந்த எச்சரிக்கையை விடுப்பது எனது கடமை என உணர்கிறேன்.''

ஆம், ராஜாஜி கூறுவதுபோல் நிலைமையின் பயங்கரத் தன்மையைப் பூரணமாக உணர்ந்து எதிர்க் கட்சித் தலைவர்களும், மக்களும், தொழிலதிபர்களும், இத் தேர்தலில் கம்யூனிஸச் சார்புள்ள ஆட்சியை அடித்து விரட்டியேயாக

வேண்டும். இன்றைய ஆட்சியாளர்களுக்கு மீண்டும் 'பட்டா' கொடுத்து விட்டோமோ, அதன் பின் நம்மைக் கம்யூனிஸ பரதேசசாதி காரத்துக்கு இழுத்துச் செல்லும் ராக்ஷஸ வலையினின்று விடுபடவே முடியாமற் போகும்.

அறிக்கை இறுதியில் சேமிப்பும் லாபமும் பயனற்றுப் போகும் என்று ராஜாஜி தமக்கே உரிய முறையில் ரத்தினச் சுருக்கமாகச் சொல்லியிருப்பது முக்காலும் உண்மை—அதாவது மூன்று விதத்தில் உண்மை. முதலாவது எதிர்க் கட்சித் தலைவர்கள் எப்படியேனும் இந்திரா ஆட்சியை ஒழிப்பதில்முனையாமல் தங்களது தனிப்பட்ட கொள்கைகளைக் காத்துக் கொள்வதிலும், தத்தம் கட்சி அந்தஸ்தைக் காப்பதிலும் முனைந்து, ஐக்கியப்படுவதில் தளர்ச்சியுற்றால், அவர்கள் காத்துக்கொண்ட இந்த 'அந்தஸ்து லாபம்' பிற்பாடு கம்யூனிஸ ஆட்சியில் அடியோடு சூன்யமாகும். எதிர்க் கட்சியேகிடையாது என்ற நிலைக்கு — அதாவது இக்கட்சிகளின் தற்கொலைக்கே — வழிவகுத்ததாகும்.

இரண்டாவது, தொழிலதிபர்களும் சொத்துக்காரர்களும் ஜனநாயக எதிர்க் கட்சி முன்னணிக்குத் தங்களால் முடிந்த பொருளுதவி அனைத்தும் புரிய வேண்டும். அவ்வாறின்றி இதில் எதையோ சேமிக்க நினைத்தால்—அல்லது ஆள்கிற கட்சியை ஆதரித்தாலே எதிர் காலத்தில் தங்கள் வளர்ச்சிக்கு உதவி கிடைக்கும் என்று நினைத்தால் — அதுவும் பொய்க் கனவாகவே முடியும். ஏனெனில் கம்யூனிஸ ஆட்சியில் எல்லாத் தொழிலும் சர்க்கார் உடைமையாகும்; எல்லாச் சொத்துக்களும் சர்க்காரால் சுவீகரம் செய்யப்படும்.

மூன்றாவது, மக்கள் தங்களது உதாசினப் போக்கை விட்டு, தற்போது தாங்கள் ஆழ்ந்துள்ள வெற்று வார்த்தைப் பிரமைகளிலிருந்து விடுபட்டு, இந்திரா ஆட்சி கவிழுவதற்குத் தங்கள் ஆத்ம சக்தி முழுவதையும் உபயோகிக்க வேண்டும். தங்கள் வாக்குச் சக்தி, எழுத்துச் சக்தி, செயலாற்றல் அனைத்தையும் இந்தப் பணிக்கே அவர்கள் அடுத்து வரும் சில வாரங்களில் வலுவாக உபயோகிக்க வேண்டும். 'நமக்கென்ன வந்தது?' என்று மெத்தனமாக இருந்து, தமது சக்திகளைச் 'சேமித்து'க்கொண்டால், பிறகு வாக்குச் சக்தி, எழுத்துச் சக்தி, செயலாற்றல் எதையுமே சுதந்திரமாகப் பிரயோகிக்க இயலாதபடி கம்யூனிஸப் பிடிப்பில் சிக்க வேண்டும்.

ஓராண்டு முன்னதாகவே தேர்தல் வருகிறது! தேசத்தை நாசம் செய்வோரின் ஆட்சி நீங்க வேண்டும் என நம் நாட்டு நன்மக்கள் புரிந்த பிரார்த்தனையை இறைவன் செவிமடுத்துத் தந்துள்ள வரப்பிரசாதமாகவே வந்துள்ளது தேர்தல்! இந்த வரப்பிரசாதத்தை விமோசனமற்ற சாபத்தீடாக ஆக்கிக்கொள்ளாதிருக்க நம் அரசியல் தலைவர்களுக்கும், தொழிலதிபர்களுக்கும், வாக்காளர் அனைவருக்கும் அறிவுத் தெளிவு பிறக்க அதே ஆண்டவனைப் பிரார்த்திக்கிறோம்.

**ஸப் கோ ஸன்மதி தே பகவான்!**

## வருந்துகிறோம்

சட்டத் துறையிலும், சங்கீதத் துறையிலும், சமயத் துறையிலும் பிரமுகராக விளங்கிய ஸ்ரீ டி. எல். வேங்கடராம அய்யர் அவர்களை இழந்துவிட்டோம். பிரபல வழக்கறிஞராகத் தொழில்புரிந்தபின் சென்னை உயர்நீதி மன்றத்திலும், தில்லி ஸுப்ரீம் கோர்ட்டிலும் நீதிபதியாக விளங்கி நடுக்கண்ட நியாயம் வழங்குவதில் புகழ் பெற்றார். அதன்பின் சட்டக் கமிஷன் தலைவராக அரும்பணியாற்றினார்.



வேத வேதாந்த பண்டிதோத்தமராகிய ஸ்ரீ லக்ஷ்மணசூரி அவர்களின் புத்திரராகிய வேங்கடராமய்யர் நமது சமய இலக்கியங்களில் ஆழ்ந்த தேர்ச்சியும் சமய அநுஷ்டானங்களில் அடர்ந்த பற்றும் கொண்டிருந்தவர். பல சமய நிறுவனங்களில் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தார்.

ஸ்ரீ வேங்கடராம அய்யர் அவர்களின் இசைப் புலமையை நாடறியும். மேடைக் கச்சேரி செய்யும் வித்துவானாக இல்லாத போதிலும், 'சங்கீத கலாநிதி' விருதினைப் பெற்றவர் அவர். மியூஸிக் அகாடெமி ஸ்தாபகராகிய ஸ்ரீ கே. வி. கிருஷ்ணஸ்வாமி அய்யர் அவர்களுக்குப் பிறகு அகாடெமியின் தலைவராக விளங்கி அதற்குக் கௌரவமூட்டி வந்தார். ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதர் அவர்களின் கிருதிகளில் அவருக்கிருந்த ஞானம் அபாரமானது. ஜட்ஜாகிய அவர் ஸ்ரீ அம்பி தீக்ஷிதரிடம் சீடராக அமர்ந்து சங்கீத சிட்சை பெற்ற அற்புதத்தையும், இன்றைய பிரபலவித்துவான்களில் பலர் தீக்ஷிதர் கிருதிகளை ஸ்ரீ வேங்கடராமய்யரிடமிருந்து பாடம் பண்ணிய அருமையையும் இசையுலகு அறியும்.

அறிவும், பண்பும், கலை ஞானமும், தெய்வபக்தியும், சமய உணர்வும் நிரம்பிய ஒரு பெருந்தகையாளர் நம்மிடமிருந்து பிரிந்துவிட்டார்!

# அடுத்த இதழில்.....

அமரர் கல்கி எழுதிய

## மோகினித் தீவு

சிறு நாவல்

ஜனவரி 17 பொங்கல் மலரில் ஆரம்பமாகிறது





## சிங்கக் கழுகு

சித்திரத் தொடர் கதை



## ஏன் முடியாது?

நடக்காத காரியங்கள் என்று கருதப்பட்டு, பின்னர் மாபெரும் சாதனைகளாக மாறிய அதிசயங்கள்



அடுத்த

**கல்கி**

பொங்கல் இதழுடன்

ஜெகசிற்பியன்

எழுதிய

**கண்ணபுரத்துக் கதாநாயகன்**

இலவச வெளியீடு

கேட்டு வாங்குங்கள்






# ராஜாஜியின் கருத்துக்கள்

கம்யூனிஸத்தின் எந்த மோஸ்தரையும் இந்தியா விரும்பவில்லை என்று நிரூபிப்பதற்கு பகவானே தந்துள்ள அரும் வாய்ப்பு, இப்போது வரவிருக்கும் இடைத்தேர்தல் என எல்லா ஜனநாயகக் கட்சித் தலைவர்களும் உணர வேண்டும். ஸ்ரீமதி இந்திராவை எதிர்ப்பவர்களும் இன்னும் சுருசுருப்பையும் செயலூக்கத்தையும் தன்னம்பிக்கையையும் காட்டினால் எவ்வளவு நன்றாக இருக்கும்! மக்கள் சுதந்திரத்தின்மீதும் அரசியல் சாஸனத்தின்மீதும் ஸ்ரீமதி இந்திரா காந்தி செய்யும் தாக்குதலால் ஏற்பட்டுள்ள பேராபத்தை எதிர்க்கட்சித் தலைவர்கள் உணர்ந்து, இதற்குத் தொடர்பற்ற மற்ற விஷயங்களை மறந்தே விட வேண்டும். இந்திய விடுதலைக்காகப் போராடி வெற்றிகொண்ட மகாபுருஷர்களின் பணி அனைத்தும் அரசியல் சாஸனமாக உருவெடுத்தது. அந்தச் சாஸனத்தை இன்று ஸ்ரீமதி இந்திரா காந்தி வெற்றுக் காகிதமாகக் கருதுகிறார். கம்யூனிஸ்ட்களையும் மற்றவர்களையும் துணைகொண்டு சாஸனத்தைக் கிழித்துக் குப்பைக் கூடையில் எறியப் பார்க்கிறார்.

"ஒன்று சேருங்கள்! ஒன்று சேருங்கள்!" என்று எதிர்க்கட்சித் தலைவர்களுக்கு வேண்டுகோள் விடுக்கிறேன். எதிர்க் கட்சிகள் அர்த்தமற்ற அற்ப விஷயங்களில் மனத்தைச் சிக்க வைத்துக் கொண்டிருக்கும் போக்கை விட்டுவிட வேண்டும். யாரும் கேட்காமலே வந்து வாய்த்துள்ள இப்பெரும் போராட்டத்தில் வென்றே தீருவது என்று சங்கற்பித்துக் கொள்ள வேண்டும். இவ்விதம் செய்தால் பண பலமும் சலுகையாட்சியின் சக்தியும் வெறும் கூளமே என நிரூபணமாகும்; அரசியல் சாஸனம் காப்பாற்றப்படும்.

★

*போதனை மொழி குறித்து என் கருத்துக்கள் அனைவருக்கும் தெரிந்தனவே. இன்று இதில் கவனிக்க வேண்டியது, மாநிலப் பற்று மிகையாவதால் தேச ஐக்கியத்துக்கு ஏற்படக் கூடிய ஆபத்தேயாகும். ஹிந்தி, தமிழ், தெலுங்கு போன்ற பிரதேச மொழிகளை அந்தந்தப் பிராந்தியத்தில் கல்லூரி போதனை மொழியாக்குவது ஒருகாலும் தேசத்தின் ஒருமைப்பாட்டுக்கு உதவாது. இது இந்தியாவின் அறிவாளிகளுக்கிடையே வேலிகளைப் போட்டுக் கொள்வதேயாகும். 'ஆங்கிலம்தான் இந்தியாவின் தொடர்பு மொழியாக இருத்தல் வேண்டும், ஹிந்தியல்ல' என்று கருதினேமாயின் ஆங்கிலம் தான் சர்வகலாசாலைகளில் பயிற்று மொழியாக இருக்க வேண்டும். தாய்மொழிப் பயிற்சி இயல்பாகவே ஆழ வேர் விட்டுக் கொண்டுள்ள ஒன்றாகும். ஆங்கிலத்தைச் சர்வகலாசாலை மொழியாக்குவதால் தாய்மொழி அறிவு வளர்ச்சிக்கு எவ்விதத்திலும் ஊறு ஏற்படாது. நம் ஆங்கிலத் தொடர்பு காரணமாகவே, இப்போது இந்திய மொழிகள் அனைத்தின் இலக்கியமும் செழித்து வந்திருப்பதைக் காண்கிறோம். கல்லூரி மாணவர்களின் ஆங்கில அறிவைத் தாழ்த்திப் பிரதேச மொழிகளால் முள் வேலி போடுவது பிராணுபத்தாக முடியும். அது தேசப் பற்றாகாது; தேசப் பற்றுக்கு நேர் மாறாகும். இன்று தேசம் உள்ள நிலையில் அதைக் குறுகிய பிரதேசப் பித்தின்மீது துண்டாடி, சதிகாரக் கூட்டங்களின் நோக்கத்துக்குப் பலியாக்குவது கூடவே கூடாது.*

*கல்லூரி போதனை மொழி குறித்து ஆராய்வதற்காகக் கல்வி நிபுணர் குழு ஒன்றைத் தமிழக அரசாங்கம் நிறுவியிருப்பது பற்றி மகிழ்ச்சியடைகிறேன். ஆட்சியதிகாரத்தில் உள்ள மந்திரி சபையின் கொள்கைகளால் சிறிதும் பாதிக்கப்படாமல் இக் குழுவில் உள்ள உயர் மக்கள் பிரச்னையில் மனத்தைச் செலுத்துவர் என நம்புகிறேன்.*

## குடநீராட்டுப் பெறும் பனங்காட்டீசன்

*தென்னார்க்காடு மாவட்டத்தில் விழுப்புரத்துக்கு வடகிழக்கில் ஆறு மைலில் சிறு கிராமமாக இன்று உள்ளது பனையபுரம். ஆனால் இது சோழ சாம்ராஜ்யத்தில் பனையூர் நாட்டுக்குத் தலைநகராக இருந்தது. இங்கு கோயில் கொண்டுள்ள பனங்காட்டீசரைத் திருஞானசம்பந்தப் பெருமான் தேவாரம் சூட்டி அணி செய்திருக்கிறார். நாட்டுக்கோட்டை நகரத்தார், மற்றும் வட்டாரப் பெருங்குடி மக்கள் ஆகியோரின் திரவிய சகாயம் பெற்று லட்சக்கணக்கான ரூபாய் செலவில் இவ்வாலயத் திருப்பணி நடந்துள்ளது. பிப்ரவரி ஏழாந் தேதி கும்பாபிஷேகம் செய்யத் திட்டமிட்டுள்ளனர். இதற்கு ஆஸ்திக அன்பர்கள் பொருளுதவியை அடியில் காணும் முகவரிக்கு அனுப்பக் கோருகிறோம்: பொருளாளர், திருப்பணிக் குழு, பனங்காட்டீசர் ஆலயம், பனையபுரம், விழுப்புரம் வட்டம், தெ. ஆ. மாவட்டம்.*

# கொட்டும் குளவியும் தொண்டனே!

**விளங்கும் விஞ்ஞானம்**

**பா**வம், குளவிகளுக்கு நண்பர்களே கிடையாது !

வீட்டிலே அவற்ருல் தொந்தரவு. பழத் தோட்டங்களில் அவற்ருல் தொல்லை. குளவிகளைக் கண்டு யாரும் பயப்பட வேண்டியதில்லை. அவற்றுக்கு எரிச்சல் ஊட்டினுலோ, தடங்கல் செய்தாலோ அல்லது அவற்றை அச்சுறுத்தினுலோ தான் அவை கொட்டும்.

தேனீக்களுக்கு நிறைய விளம்பரம் கிடைக்கிறது: "அடடா ! மெழுக்கினுல் தேன் கூட்டை எத்தனை அற்புதமாக அமைக்கிறது" என்று பாராட்டுகிறோம். குளவிக் கூட்டைப் பாராட்டுவார் இல்லை. ஆனால் ஆதியில் (கி. மு. இரண்டாம் நூற்ருண்டு) சீனர்கள் காகிதம் தயாரிக்கக் கற்றுக் கொண்டதே குளவிக் கூட்டைப் பார்த்துத்தான் !

பூக்களைக் கருவுறச் செய்யத் தேனீக்கள் மகரந்தத் துகள்களை மற்ருெரு பூவிலிருந்து கொண்டு வந்து உதவுகிறது என்பதால், தேனீக்களை வாழ்த்துகிறோம். ஆனால் கெடுதல் விளைவிக்கும் பூச்சிகளைக் குளவிகள் கொல்கின்றனவே ? அதற்குக் குளவியை யார் போற்றுகிருர்கள் ?

பட்டுப் பூச்சிக்கு உள்ளது போல் குளவிக்கும் முட்டைப் பருவம், புழுப் பருவம், கூட்டுப் பருவம், பறக்கும் பருவம் எல்லாம் உண்டு. புழுப் பருவத்தில் குளவிகள் பூச்சிகளை மட்டுமே உண்டு வாழ்கின்றன. பறக்கும் குளவியாக உருமாறிய பின்னர்தான் குளவிக்கு இனிப்புப் பொருளில் ஆசை பிறக்கிறது. அதிலும் பெண் குளவிகளுக்கு மட்டுமே இந்தத் தித்திப்பான ஆசை.

தாய்க் குளவி பூச்சியைக் கடித்து மென்ற பிறகு அதனை, கூட்டுக்குள் தலைகீழாகத் தொங்கியவாறு தன் புழுக் குஞ்சுகளுக்கு ஊட்டும்.

வேறு சில ரகக் குளவிகள் ஒவ்வொரு முட்டைக்கும் ஒரு தனி அறை ஏற்படுத்தி அதனுள் பூச்சி உணவையும் சேகரித்து வைத்துப் பின்னர் ஸீல் வைத்தாற் போல் அறையை மூடிவிடும்.

செத்துப் போன பூச்சிகள் கொஞ்சநாட்கள் ஆனல் அழுகிக் கெட்டுவிடாதோ? முட்டையிலிருந்து வெளிப்படும் புழுப் பருவக் குளவி இதை எப்படி உண்ணும்? ரகசியம் என்னவென்ருல், குளவி பூச்சிகளைக் கொல்வதில்லை. ஆகாரமாகப் போகிற பூச்சியைப் பல தடவை கொட்டி உணர்விழக்கச் செய்கிறது; அவ்வளவே! ஆகவே பூச்சி உணவு, கெடாமல் உயிருடன் இருக்கும் — அதை உண்ணப் புழுக் குளவி தயாராகும் வரை.

சில ரகக் குளவிகள் மிகவும் முன்ஜாக்கிரதையாகக் காரியங்களைச் செய்கின்றன. இவை தங்கள் முட்டையைக் குளவிக்கூட்டு அறையில் கூரையிலிருந்து ஒரு நூலில் தொங்க விடுகின்றன. புழு வெளியே வந்ததும் தலையை நீட்டிக் கீழே தாய் தனக்காகச் சேமித்து வைத்திருக்கும் பூச்சி உணவை உட்கொள்கிறது. அதே நேரத்தில் இது உயரத்தில் இருப்பதால் அந்தப் பூச்சியினுல் இதற்குத் தீங்கு நேர்வது கிடையாது. கொஞ்சம் வளர்ந்து பெரிய உருவம் கொண்டதும் குளவிப் புழு கீழே இறங்கி வரும் ; உயிருள்ள உணவினங்களிடையே தைரியமாக நடமாடும்.

ஈ, பட்டுப் புழு போன்ற மிருதுவான பூச்சிகளை மட்டுமல்ல; கடினமான, ஓடு போன்ற புற அமைப்புக் கொண்ட ஜந்துக்களைக்கூட சில குளவிகள் கொட்டி உணவாக்கிக் கொணர்ந்து கூட்டில் வைத்து விடுகின்றன. ஒரு ரக வண்டினமான 'பீட்டில்' எனப்படும் கரகரப்பான உணவைக்கூடக் குளவிப் புழுக்கள் எப்படியோ சமாளிக்கின்றன.

இனத் துரோகிகள் குளவிகளுக்கிடையேயும் உண்டு. உணவுத் தட்டுப்பாடில்லாமல் குஞ்சுகளைக் கவனித்துக் கொள்கின்றன அல்லவா தாய்க் குளவிகள்? இதுவே வேறு சில ரகக் குளவிகளுக்குத் தகாத ஆசைகளைத் தோற்றுவிக்கின்றன. தாய்க் குளவி வெளியே போயிருக்கும்போது இந்தத் துரோகிக் குளவி தன் முட்டையைக் கூட்டில் இட்டுவிடுகிறது. இந்த இரண்டாவது முட்டை சீக்கிரமாகப் பொரிய, வெளிப்படும் திருட்டுப் புழு, முதலில் மற்ருெரு முட்டையைத் தின்று கபளீகரம் செய்து விடுகிறது! பின்னர், மேலே மேலே வந்து கொண்டிருக்கும் உணவையும் ஒரு கை பார்க்கிறது. தாய்க் குளவி, தான் இட்ட முட்டை அழிந்தது தெரியாமல் அதை அழித்தவனுக்கே உணவூட்டிக் கொண்டிருக்கிறது!



'ஸ்பெக்ஸ்' எனப்படும் ஒருவித நூதனக் குளவிக்கு ஒரு தனிப் பெருமை உண்டு. இது பூமிக்கடியில் கூடு கட்டி முட்டையிடுகிறது. பட்டுப் புழுக்களை உணவாக உள்ளே வைக்கிறது. பிறகு மண்ணைப் போட்டுக் குழியை மூடுகிறது. அது மட்டுமா? ஒரு சிறு கல்லைத் தன் வாயால் கௌவி எடுத்து, மூடிய மண் மீது இமிக போடுகிறது!

நமக்குத் தெரிந்த எத்தனையோ ரகப் பூச்சிகளுள் ஓர் ஆயுதத்தை உபயோகப்படுத்தும் பூச்சி இது ஒன்றே! - **மைக்கேல் ஆர்னுல்டு**

படம்: இந்த ஜெர்மானியக் குழந்தைகளின் முகத்தில் ஊர்ந்து செல்லும் பொன் வண்டுகளைக்கூடக் குளவி ;5ன் குஞ்சுப் புழுக்களுக்கு இரையாக்கி விடுகிறது. -யு.பி.எஸ்.

## இரண்டாம் அத்தியாயம்

## வந்தான் முருகய்யன்



சூடாமணி விஹாரத்துக்கு வெளியே கடல் பொங்கும்போது எழும் ஓசையைப் போல் மக்களின் இரைச்சல் ஒலி பெருகிக் கொண்டிருந்ததைச் சிறிது நேரம் ஆச்சாரிய பிக்ஷுவும் அருள்மொழி வர்மரும் கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

அந்தப் புத்த விஹாரமும் அதில் உள்ள பிக்ஷுக்களும்



# பொன்னியின் செல்வன்

தம்மால் இந்தப் பெரும் சங்கடத்துக்கு உள்ளாகியிருப்பதை எண்ணி இளவரசர் மிகவும் மனக் கலக்கம் அடைந்தார்.

''சுவாமி! என்னால் உங்களுக்கு இந்தத் தொல்லை உண்டானதைப் பற்றி வருத்தப்படுகிறேன்'' என்றார்.

''இளவரசே! தங்கள் காரணமாக இதுபோல் நூறு மடங்கு தொல்லை நேர்ந்தாலும் நாங்கள் பொருட்படுத்த மாட்டோம். தாங்களும் தங்கள் குடும்பத்தாரும் எங்களுக்குச் செய்திருக்கும் உதவிகளுக்கு இது ஒரு கைம்மாறாகுமா?'' என்றார் பிக்ஷு.

''அது மட்டும் அல்ல. இம்மாதிரி ஒளிவு மறைவாகக் காரியம் செய்வது எனக்கு எப்போதும் பிடிப்பதில்லை. நான் இங்கு



அமரர் கல்கி

இருந்து கொண்டே எதற்காக 'இல்லை' என்று சொல்ல வேண்டும்? சத்தியத்துக்கு விரோதமான இந்தக் காரியத்தில் தங்களையும் எதற்காக நான் உட்படுத்த வேண்டும்? தங்களுடைய பரிவான சிகிச்சையினால் எனக்கு உடம்பு நன்றாகக் குணமாகிவிட்டது. இப்போதே வெளியேறிச் சென்று ஜனங்களிடம் நான் இன்னான் என்பதைத் தெரியப்படுத்திக் கொள்கிறேன். தாங்கள் எனக்கு அடைக்கலம் அளித்துச் சிகிச்சை செய்து என் உயிரையும் காப்பாற்றினீர்கள் என்பதை மக்களிடம் அறிவிக்கிறேன். இந்தச் சூடாமணி விஹாரத்துக்கு என் காரணமாக எந்தவித அபகீர்த்தியும் ஏற்படக் கூடாது'' என்றார் இளவரசர்.

''ஐயா! இதில் சத்தியத்துக்கு விரோதமான காரியம் எதுவும் இல்லை. தங்களுடைய எதிரிகள் தாங்கள் இருக்கும் இடத்தைக் கண்டுபிடிக்க முயல்கிறார்கள். இந்த நாகைப்பட்டினத்தில் அவர்கள் சென்ற இரண்டு நாட்களாகப் பரப்பியுள்ள வதந்தியிலிருந்தே அது நிச்சயமாகிறது. அப்படியிருக்கத் தாங்கள் இங்கே இருப்பதைத் தெரிவியாமல் வைத்திருப்பதில் தவறு என்ன? அரச குலத்தினர் இம்மாதிரிச் சில சமயம் மறைந்திருக்க வேண்டியது இராஜரீக தர்மத்துக்கு உகந்தது. பஞ்ச பாண்டவர்கள் ஒரு வருஷம் அஞ்ஞாத வாசம் செய்யவில்லையா? அப்போது தர்மபுத்திரர் சத்தியத்துக்கு மாறாக நடந்தார் என்று சொல்ல முடியுமா?'' என்று பிக்ஷு கேட்டார்.

''குருதேவரே! தங்கள் அறிவுத் திறனும் விவாதத் திறனும் அபாரமானவை என்பதை அறிவேன். தங்களுடன் தர்க்கம் செய்து என்னால் வெல்ல முடியாது. ஆனாலும் ஒன்று சொல்லுகிறேன். பஞ்ச பாண்டவர்கள் மறைந்திருக்க வேண்டியது அவர்கள் ஏற்றுக்கொண்ட சூள் காரணமாக அவசியமாயிருந்தது. எனக்கு அப்படி அவசியம் ஒன்றும் இல்லை. என் விரோதிகளைப்



பற்றிச் சொல்கிறீர்கள். எனக்கு அப்படிப்பட்ட விரோதிகள் யார்? எதற்காக அவர்கள் என்னை விரோதிக்க வேண்டும்? எனக்கோ இராஜ்யம் ஆள்வதில் சிறிதும் ஆசையில்லை. இதையெல்லாம் நான் வெளியிட்டுச் சொல்லி அப்படி யாராவது எனக்கு எதிரிகள் இருந்தாலும், அவர்களையும் சிநேகிதர்கள் ஆக்கிக் கொள்வேன். என்னால் உங்களுக்குத் தொந்தரவும் இல்லாமற் போகும். மக்களும் நான் உயிரோடிருப்பது அறிந்து ஏதேனும் திருப்தி அடைவதாயிருந்தால் அடையட்டுமே! அதில் யாருக்கு என்ன நஷ்டம்?''

''இளவரசே! தாங்கள் சொல்லுவதெல்லாம் உண்மையே. தங்களுடைய நிலைமையில் நானும் அவ்விதமே எண்ணி நடந்து கொள்வேன். ஆனால் அதற்குத் தடையாக நிற்பது தங்கள் திருச் சகோதரி குந்தவைப் பிராட்டிக்கு நாங்கள் கொடுத்திருக்கும் வாக்குறுதி தான். பழையாறை இளையபிராட்டியைப் போன்ற அறிவில் சிறந்த மாதரசி சோழ குலத்தில் தோன்றியதில்லையென்று தாங்களே பலமுறை சொல்லியிருக்கிறீர்கள். வேறு எந்த ராஜ குலத்திலும் தோன்றியதில்லை என்பது என் கருத்து. அவர் தாம் செய்தி அனுப்பும் வரையில் தங்களை இங்கே வைத்துப் பாதுகாக்கும்படி சொல்லிவிட்டுச் சென்றார். முக்கியமான காரணம் இன்றி அவர் அவ்விதம் சொல்லி யிருக்க மாட்டார். சுந்தர சோழ சக்கரவர்த்தியின் குடும்பத்துக்கு விரோதமாகச் சோழ நாட்டுச் சிற்றரசர்கள் பலர் சதி செய்வதாக நாடெல்லாம் பேச்சாக இருந்து வருகிறது. மற்றொரு பக்கத்தில் பாண்டிய நாட்டைச் சேர்ந்த சிலர் இரகசிய சதி வேலை செய்து வருவதாகவும் பேசிக் கொள்கிறார்கள். அந்தக் கூட்டத்தாருக்கு இந்தப் புத்த விஹாரத்திலுள்ள நாங்கள் உதவி செய்கிறோமோ என்று எண்ணித்தான் ஜனங்கள் ஆத்திரம் அடைந்து வாசலில் வந்து கூடியிருக்கிறார்கள். இந்த நிலைமையில் தாங்கள் வெளியேறி மக்களின் முன்னிலையில் தங்களை வெளிப்படுத்திக் கொள்வது உசிதமான காரியமா? யோசியுங்கள்! அதைக் காட்டிலும் தங்களைப் பாதுகாக்கும் முயற்சியில் எங்களுக்கெல்லாம் ஏதேனும் சங்கடம் நேர்ந்தால் நேரட்டுமே? அதற்கு நாங்கள் ஒருநாளும் பின்வாங்கப் போவதில்லை....!''

இவ்வாறு தலைமைப் பிக்ஷு சொல்லிக் கொண்டிருந்த போது இன்னொரு இளம் சந்நியாசி அங்கே பரபரப்புடன் வந்தார்.

''சுவாமி! நிலைமை மிஞ்சிப் போய் விட்டது. ஆயிரக் கணக்கான மக்கள் விஹாரத்தைச் சூழ்ந்து நின்று 'இளவரசரைப் பார்க்க வேண்டும்' என்று கூச்சலிடுகிறார்கள். 'இளவரசர் இங்கே இல்லை' என்று நாங்கள் எவ்வளவு சொல்லியும் பயனில்லை. 'நாங்களே விஹாரத்துக்குள் வந்து சோதித்துப் பார்க்க வேண்டும்' என்று கூச்சலிடுகிறார்கள். அவர்களுக்கு நாம் ஏதாவது ஒரு வழி சொல்லாவிட்டால் பலாத்காரமாக உள்ளே புகுந்து விடுவார்கள் போலிருக்கிறது!'' என்றார்.

''அவர்களுக்கு நாம் என்ன வழி சொல்ல முடியும்? புத்த பகவான் அவர்களுடைய மனத்தை மாற்ற ஏதேனும் வழி கூறினால்தான் உண்டு!'' என்றார் தலைமைப் பிக்ஷு.

இளவரசர் அப்போது ''குருதேவரே! எனக்கு ஒரு வழி தோன்றுகிறது. கருணை கூர்ந்து கேட்க வேண்டும். தங்கள் சீடர்கள் நான் இங்கே இல்லை என்று ஜனங்களுக்குச் சொல்லி யிருக்கிறார்கள். இனி நான் ஜனங்களின் முன்னிலையில் போய் நின்றால் தங்கள் சீடர்களின் வாக்கைப் பொய்யாக்கியதாகும். அதனால் ஒருவேளை ஜனங்களின் மூர்க்காவேசம் அதிகமானாலும் ஆகலாம்'' என்றார்.

''நிச்சயமாய் ஆகியே தீரும். அதன் பலனை நாங்கள் அநுபவிக்க வேண்டியது தான்'' என்றார் பிக்ஷு.

''அதைக் காட்டிலும் தங்களுடைய சீடர்களின் வாக்கை நான் மெய்யாக்கி விடுகிறேன்...''

''இளவரசே! தங்களால் கூட அது முடியாத காரியம் என்று நினைக்கிறேன். இவர்கள் சொன்னது சொன்னது தானே? அதை எப்படி இனி மெய்யாக்க முடியும்?''

''அதற்கு வழியிருக்கிறது. ஜனங்கள் இந்த விஹாரத்துக்குள் புகுவதற்குள்ளே நான் இங்கிருந்து போய்விடலாம் அல்லவா?''

''ஆகா! எங்களைக் காப்பாற்றிக் கொள்வதற்காக அத்தகைய பாவச் செயலை நாங்கள் செய்ய வேண்டுமா? தங்களை வெளியேற்ற வேண்டுமா?''

''குருதேவரே! இதில் பாவமும் இல்லை, பழியும் இல்லை. இங்கிருந்து அரைக்காத தூரத்தில் ஆனைமங்கலத்தில் சோழ மாளிகை இருக்கிறது. அன்றைக்கு என் சகோதரியைப் பார்க்கச் சென்றபடி இப்போதும் உடனே கால்வாய் வழியே அங்கே போய்விடுகிறேன். பிறகு சௌகரியமானபோது

திரும்பி வந்து விட்டால் போகிறது!'' என்று சொன்னார் இளவரசர்.

ஆச்சாரிய பிக்ஷுவுக்கு இளவரசர் கூறிய அந்த யோசனை பிடித்திருந்த தாகத் தோன்றியது.

''ஆம், ஆம்! அப்படிச் செய்தால் தங்களை உடனே வெளிப்படுத்திக் கொள்ள வேண்டிய அவசியமில்லாமற் போகும். தங்கள் தமக்கையின் கருத்தையும் நிறைவேற்றியதாகும். ஆனால் கால்வாய் விஹாரத்திலிருந்து வெளியேறும் இடத்திலும் ஜனங்கள் நிற்கலாம் அல்லவா? அவர்கள் படகில் தாங்கள் போவதைப் பார்க்கக்கூடுமே!'' என்றார்.

''குருதேவரே! அதற்கு ஓர் உபாயம் செய்ய முடியும். கூட்டத்தில் உள்ளவர்களில் யாரேனும் ஒருவன் விஹாரத்துக்குள் வந்து தேடிப் பார்த்துக் கொள்ளலாம் என்று சொல்லுவோம்'' என்றார் இளம் பிக்ஷு.

''ஒருவன் வந்து பார்த்தால் போதாதா? அவன் வெளியிலே சென்று மற்றவர்களிடம் சொல்ல மாட்டானா?'' என்றார் குரு.

''அவனை இங்கே கொஞ்சம் தாமதப் படுத்தி வைத்திருந்தால் அதற்குள் இருட்டி விடும். இளவரசர் வெளியேறச் சௌகரியமாயிருக்கும். அதுமட்டுமல்ல; சீக்கிரத்தில் ஒரு பெரும் புயல் அடிக்கலாம் என்பதற்கு அறிகுறிகள் தென்படுகின்றன. இங்கிருந்து பார்க்கும்போதே கடல் அலைகள் மலை போல் எழுகின்றன. கடலின் ஆரவாரம் அதிகமாகி வருகிறது. புத்த பகவானுடைய கருணை அப்படி இருக்கிறதோ, என்னமோ? பெரும் புயல் அடித்து நம்முடைய இந்தச் சங்கடம் தீர வேண்டும் என்பது பகவானுடைய சித்தமோ என்னமோ!'' என்று கூறினார் இளம் பிக்ஷு.

''அப்படியெல்லாம் சொல்ல வேண்டாம். நம்முடைய சங்கடம் தீருவதற்காகக் கடல் கொந்தளித்துப் பெரும் புயல் வரவேண்டுமா?'' என்றார் குரு.

''சுவாமி! தங்கள் சீடர் சொல்லும் வழியைப் பரீட்சித்துப் பார்க்கலாம் என்று எனக்கும் தோன்றுகிறது. உள்ளே ஒரு தனி மனிதன் மட்டும் வந்தால், ஒருவேளை அவனிடம் நான் பேசி அவன் மனத்தை மாற்றுவது சாத்தியமாகலாம்'' என்றார் இளவரசர்.

''அந்த யோசனையும் என் மனத்தில் இருக்கிறது. இரண்டு தினங்களுக்கு முன் கோடிக்கரையிலிருந்து ஒரு படகோட்டியும் அவன் மனையாளும் விஹாரத்தின் வாசலில் வந்து இளவரசரைப் பற்றி விசாரித்தார்கள். இளவரசர் இங்கேதான் இருக்க வேண்டும் என்று சொன்னார்கள். படகோட்டியின் மனையாள் பெரும் கூச்சல் போட்டாள்...!''

''ஆகா! அப்படிப்பட்ட படகோட்டி யார்? அவன் பெயர் என்னவென்று தெரியுமா?'' என்றார் இளவரசர்.

''ஆம்; தன் பெயர் முருகய்யன் என்று சொன்னான். கோடிக்கரைத் தியாகவிடங்கர் மகன் என்று கூறினான்.''

''அவன் எனக்கு நன்கு தெரிந்தவன். என் விருப்பத்துக்கு விரோதமாக எதுவும் செய்ய மாட்டான். அவனை ஏன் என்னிடம் அழைத்து வரவில்லை?''

''அவன் பெண்டாட்டியினால் நமது இரகசியத்தைக் காப்பாற்ற முடியாது என்று எண்ணினோம். இப்போது அவனும் அவன் மனையாளும் மக்களின் கூட்டத்தில் இருக்கிறார்கள்....''

''பழம் நழுவிப் பாலில் விழுந்தது போலாயிற்று. படகோட்டி முருகய்யனை மெதுவாக இங்கே அழைத்து வந்து விடுங்கள். நான் இட்ட கோட்டை அவன் தாண்ட மாட்டான். இருட்டிய பிறகு திரும்பி வந்து அவனே என்னைப் படகில் ஏற்றி ஆனைமங்கலத்துச் சோழ மாளிகைக்கு அழைத்துப் போய்விடுவான்!'' என்றார் இளவரசர்.

ஆச்சாரிய பிக்ஷு, ''இளவரசே! இந்தக் காலத்தில் யாரையும் பூரணமாக நம்பிவிடுவதற்கில்லை. இந்தப் படகோட்டியும் அவனது மனையாளும்தான் இரண்டு நாட்களாக இந்தப் பட்டினத்தில் தங்களைப் பற்றிய வதந்தியைப் பரப்பி யிருக்க வேண்டும் என்று கருதுகிறேன்'' என்றான்.

''அப்படியே யிருந்தாலும் அதனால் பாதகமில்லை. எப்படியும் யாரேனும் ஒருவனை விஹாரத்துக்குள் அழைத்து வரவேண்டும் அல்லவா? அவன் கொஞ்சம் பெண்டாட்டி சொல்கிறபடி ஆடுகிறவன்தான். ஆனாலும் என் விருப்பத்துக்கு மாறாக மனையாள் சொல்வதைக் கூடக் கேட்க மாட்டான். முடியுமானால் அவனையே அழைத்துக் கொண்டு வாருங்கள்!'' என்றார் இளவரசர்.

ஆச்சாரிய பிக்ஷுவின் சம்மதத்துடன் இளைய பிக்ஷு வெளியேறினார். அவர் சென்ற சிறிது நேரத்துக்கெல்லாம் பெரிய பிக்ஷு ''இளவரசே! என் மனம் ஏனோ நிம்மதியாகவே இல்லை. நானும் வெளியிலே சென்றுபார்த்து வருகிறேன். ஜனங்களுடைய மனோநிலை எப்படி இருக்கிறது என்பதை நேரில் அறிந்து வருகிறேன். என்னுடைய பிசகினால் இந்தப் புராதனமான சூடாமணி விஹாரத்துக்கும் கேடு வரக்கூடாது, தங்களுக்கும் தீங்கு எதுவும் நேரக்கூடாது!'' என்று சொல்லிவிட்டு வெளியே சென்றார்.

## மூன்றும் அத்தியாயம்

# கடல் பொங்கியது!

விஹாரத்துக்கு வெளியே ஆச்சாரிய பிக்ஷு கண்ட காட்சி அவருக்குக் கதிகலக்கம் உண்டாக்குவதா 'யிருந்தது. ஆயிரக் கணக்கான மக்கள் திரண்டு வந்து நின்று கொண்டிருந்தார்கள். அவர்களுடைய தோற்றமும் அவர்கள் போட்ட கூச்சலும் அவர்கள் ஆவேசங் கொண்டவர்கள் என்பதைக் காட்டின. அந்த ஆவேசத்தைக் குரோத வெறியாகச் செய்வது மிக எளிதான காரியம். பலர் கைகளில் வாள், வேல், தடி முதலிய ஆயுதங்கள் வைத்திருந்தார்கள். இன்னும் சிலரின் கையில் கடப்பாரைகளும் இருந்தன. பிக்ஷுக்கள் வழிக்கு வராவிட்டால் விஹாரத்தையே இடித்துத் தரைமட்டமாக்கி விடுவது என்று அவர்கள் உத்தேசித்திருந்தனர் போலும்.

அதற்கு வேண்டிய காரணம் இல்லாமலும் போகவில்லை. பராந்தகச் சக்கரவர்த்தியின் காலம் முதல் அடிக்கடி சோழ நாட்டுக்கும் ஈழ நாட்டுக்கும் யுத்தம் நடந்து வந்தது. சோழ நாட்டு வீரர் பலர் இலங்கைப் போர்களில் மடிந்திருந்தார்கள். ஏதாவது ஒன்றைப் பிடிக்கவில்லை என்ருல், அதைச் சேர்ந்த மற்றவையும் பிடிக்காமற் போவது மக்களின் இயல்பு அல்லவா? இலங்கைப் போர்கள் காரணமாகச் சோழ மக்களுக்கு ஏற்பட்டிருந்த ஆத்திரம் அத்தீவில் வியாபகமா யிருந்த பௌத்த மதத்தின் மேலும் ஓரளவு திரும்பியிருந்தது. ஏதாவது ஒரு சிறிய காரணம் ஏற்பட்டால் போதும்; — தமிழகத்தில் மிஞ்சியிருந்த பௌத்த விஹாரங்கள் மீதும் அவற்றில் வாழ்ந்த பிக்ஷுக்கள் மீதும் பழி தீர்த்துக் கொள்ளப் பாமர மக்கள் சித்தமா யிருந்தார்கள்.

அத்தகைய சந்தர்ப்பம் இப்போது ஏற்பட்டு விட்டதாக ஆச்சாரிய பிக்ஷு கருதினுர். யாரோ தீய நோக்கம் கொண்டவர்கள் இவ்விதம் பாமர மக்களின் ஆத்திரத்தைத் தூண்டி விட்டிருக்கிருர்கள். புத்த பகவானுடைய கருணையினுலேதான் இந்தப் பேராபத்திலிருந்து மீள வேண்டும்!....

ஆச்சாரிய பிக்ஷுவைப் பார்த்ததும் அந்த ஜனக் கூட்டத்தின் ஆரவாரம் முன்னைவிட அதிகமாயிற்று.

''பொன்னியின் செல்வரைக் கொடுத்து விடுங்கள்; இல்லாவிட்டால் விஹாரத்தை இடித்துத் தரை மட்டமாக்கிவிடுவோம்'' என்பன போன்ற மொழிகள் ஏககாலத்தில் ஆயிரக் கணக்கான குரோதம் நிறைந்த குரல்களிலிருந்து வெளியாகிச் சமுத்திர கோஷத்தைப் போல் கேட்டது. அதே சமயத்தில் கடலின் பேரோசையும் அதிகமாகிக் கொண்டிருப்பதை ஆச்சாரிய பிக்ஷு கவனித்துக் கொண்டார். இளம் பிக்ஷு கூறியது உண்மைதான். அளவிலாத வேகம் பொருந்தின கொடும் புயல் கடற்கரையை நோக்கி வந்து கொண்டிருக்கிறது. அதிசீக்கிரத்தில், புயல் கரையைத் தாக்கப் போகிறது. இந்த மக்களால் ஏற்படும் அபாயத்துக்குப் பிழைத்தாலும் புயலின் கொடுமையிலிருந்து விஹாரம் தப்பிப் பிழைக்க வேண்டுமே என்ற கவலை பிக்ஷுவுக்கு ஏற்பட்டது.

இதற்குள் வாலிபப் பிக்ஷு கையமர்த்திச் சமிக்ஞை செய்து ஆத்திரம் கொண்ட மக்களின் கூட்டத்தில் சிறிது இரைச்சல் அடங்கும்படி செய்திருந்தார்.

''மகா ஜனங்களே! எங்கள் தலைவரை அழைத்து வந்திருக்கிறேன். சற்று நிம்மதியா யிருங்கள். நீங்கள் இத்தனை பேரும் இந்த விஹாரத்துக்குள் ஒரே சமயத்தில் புக முடியாது அல்லவா? உங்களில் யாராவது ஒருவரையோ இரண்டு பேரையோ குறிப்பிடுங்கள். அவர்கள் விஹாரத்துக்குள் வந்து தேடிப் பார்க்கட்டும்! திரும்பி வந்து அவர்கள் சொல்வதை நீங்கள் ஏற்றுக் கொள்ள வேண்டும்! இது உங்களுக்குச் சம்மதம்தானே? உங்களில் யார் என்னுடன் விஹாரத்துக்குள் வருகிறீர்கள்?'' என்று வினவினுர்.

கூட்டத்தில் நூற்றுக் கணக்கானவர்கள் ''நான் வருகிறேன்'', ''நான் வருகிறேன்'' என்று கூச்சலிட்டார்கள்.

இளம்பிக்ஷு மறுபடியும் கையமர்த்தி, ''எல்லோரும் சேர்ந்து கூச்சலிடுவதினுல் என்ன பயன்? யாராவது ஒருவரைத் தேர்ந்தெடுங்கள். நான் யோசனை சொல்கிறேன். சமீப காலத்தில், சென்ற ஒரு மாத காலத்துக்குள் பொன்னியின் செல்வரைப் பார்த்தவர்கள் உங்களில் யாராவது இருந்தால் சொல்லுங்கள். அப்படிப்பட்டவரை நான் அழைத்துப் போகிறேன். இளவரசரை அடையாளம் கண்டு கொள்ளவும் சௌகரியமா யிருக்கும்!'' என்ருர்.

கூட்டத்தின் முன்னணியில் நின்று கொண்டு ஒவ்வொரு தடவையும் பெரும்

கூச்சல் போட்டுக் கொண்டிருந்த ராக்கம்மாள், "இதோ நாங்கள் பார்த்திருக்கிறோம்" என்று கூவினாள்.

படகோட்டியைப் பார்த்து இளம் பிக்ஷு, "அப்பனே! இவள் கூறுவது சரியா?" என்று கேட்டார்.

முருகய்யன், "சுவாமி! இவள் கூறுவது முழுவதும் சரியல்ல; இவள் இளவரசரைச் சமீபத்தில் பார்க்கவில்லை. நான் சென்ற ஒரு மாதத்துக்குள்ளே ஈழநாட்டில் பொன்னியின் செல்வரைப் பார்த்தது உண்மை. நான் அறியாமல் அவருக்குச் செய்த அபகாரத்துக்காகக் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டுக் கொண்டேன். அச்சமயம் அவர் கருணையுடன் என்னைப் பார்த்துப் புன்னகை புரிந்தது நேற்று நடந்தது போல் என் மனத்தில் பதிந்திருக்கிறது. அவரை நான் சுலபமாக அடையாளம் கண்டு கொள்ள முடியும்" என்று சொன்னான்.

"அப்படியானால் நீதான் இந்த வேலைக்குத் தகுதியானவன். உன் மனையாள் சொன்னதிலும் அவ்வளவு தவறு கிடையாது. நீ பார்த்தது இவள் பார்த்தது போலத்தான் என்று எண்ணிச் சொல்லி யிருக்கிறாள். இப்போதும் நீ இந்த விஹாரத்துக்குள் தேடிப் பார்த்து விட்டு வந்து சொன்னால் இவள் ஒப்புக் கொள்வாள். பிக்ஷுக்கள் தவம் செய்யும் புத்த விஹாரத்துக்குள் பெண் பிள்ளைகளை விடுகிறதில்லை என்பது உன் மனையாளுக்குத் தெரிந்துதானிருக்கும். ஆகையால் நீ வா இங்கே!" என்று இளம் பிக்ஷு கூறினார். பிறகு விஹாரத்தின் முன் வாயிற்படிகளில் இறங்கிச் சென்று முருகய்யனுடைய ஒரு கரத்தைப் பற்றி அழைத்துக் கொண்டு மறுபடியும் படிகளில் ஏறினார். மக்களைப் பார்த்து, "இதோ இந்தப் படகோட்டி முருகய்யன் சமீபத்தில் இளவரசரைப் பார்த்திருக்கிறானாம். இவனை உள்ளே அழைத்துப் போகிறேன். விஹாரம் முழுதும் தேடிப் பார்த்துவிட்டுத் திரும்பி வந்து சொல்வான். உங்கள் எல்லோருக்கும் இது சம்மதம்தானே?" என்றார்.

மக்களின் கூட்டத்திலிருந்து சம்மதக் குரல் அவ்வளவு வேகத்துடன் வரவில்லை. சிலர், "சம்மதம்" என்று முணுமுணுத்தார்கள். மற்றவர்கள் ஒருவரோடொருவர் "இதில் ஏதாவது மோசம் இருக்குமோ?" என்று இரகசியமாகப் பேசிக் கொண்டார்கள். அவர்கள் இரகசியம் பேசிய குரல்கள் சேர்ந்து கடலின் இரைச்சலுடன் போட்டி யிட்டன.

இளம் பிக்ஷு அதைக் கவனித்து விட்டு, பெரிய குரலில், "மகாஜனங்களே! இதோ எங்கள் ஆச்சாரியரும் வந்திருக்கிறார். உங்களுக்கு ஏதேனும் கேட்க வேண்டியது இருந்தால் அவரைக் கேட்டுக் கொள்ளுங்கள். அதற்குள் இந்த மனிதனை நான் அழைத்துப் போய் விஹாரத்தைச் சுற்றிக் காண்பித்து விட்டு வருகிறேன்" என்று சொல்லிப் படகோட்டி முருகய்யனை அழைத்துக் கொண்டு சென்றார்.

**கம்பீரமான தோற்றத்துடனும் சாந்தம் குடிகொண்ட முகத்துடனும்** பொலிந்த ஆச்சாரிய பிக்ஷுவைப் பார்த்ததும் மக்களின் மனத்தில் சிறிது பய பக்தி உண்டாயிற்று. அவரிடம் அதிகப் பிரசங்கமான கேள்வி எதுவும் கேட்பதற்கு யாரும் துணிவு கொள்ளவில்லை.

ஆச்சாரிய பிக்ஷு சற்று நேரம் அந்த ஜனக் கூட்டத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார். பின்னர், அவர்களுக்குப் பின்னால் சற்றுத் தூரத்தில் தெரிந்த கடலையும் நோக்கினார்.

"மகா ஜனங்களே! நீங்கள் எல்லாரும் இங்கே வந்து கூடியிருப்பதன் நோக்கத்தை அறிந்து கொண்டேன். சக்கரவர்த்தியின் திருக் குமாரரும் பொன்னியின் செல்வருமான இளவரசர் அருள்மொழி வர்மரிடம் உங்களுக்கெல்லாம் எவ்வளவு அன்பு உண்டு என்பது இன்றைக்கு எனக்கு நன்றாய்த் தெரிந்தது. உங்களைப் போலவே அடியேனும் பொன்னியின் செல்வரிடம் அன்புடையவன்தான். அருள்மொழிவர்மர் கடலில் முழுகி விட்டார் என்ற செய்தி வந்த அன்று காலையில் நான் இதே இடத்தில் நின்று கண்ணீர் அருவி பெருக்கினேன். புத்த தர்மத்தில் பற்றுக் கொண்டவர் எவரும் அருள்மொழிவர்மரிடம் அன்பு கொள்ளாமல் இருக்க முடியாது. புத்த தர்மத்துக்கும் புத்த பிக்ஷுக்களுக்கும் அவர் அத்தகைய மகத்தான உபகாரங்களைச் செய்திருக்கிறார். புத்தர்களின் புண்ணிய க்ஷேத்திரமாகிய அநுராதபுரத்தில் புத்த மன்னர்களின் காலத்தில் இடிந்து தகர்ந்து பாழான விஹாரங்களையும் ஸ்தூபங்களையும் திருப்பணி செய்து செப்பனிடுவதற்கு ஏற்பாடு செய்தவர். அப்படிப்பட்ட உத்தமரான இளவரசருக்கு எந்தவகையிலும் தீங்கு நேர நாங்கள் உடந்தையாக இருக்க முடியுமா? இளவரசருக்கு ஒன்றும் நேராமல் இருக்க வேண்டும், அவரைக் கடல் கொண்ட செய்தி பொய்யாயிருக்க வேண்டும் என்று நாங்கள் பிரார்த்தனை செய்தவண்ணம் இருந்தோம். உங்களையெல்லாம் விடப் பொன்னியின் செல்வரிடம் நாங்கள்

அன்புடையவர்களா யிருப்பதற்குக் காரணங்கள் உண்டு......''

இச்சமயத்தில் கூட்டத்தில் ஒருவன் குறுக்கிட்டு, ''அதனாலேதான் எங்களுக்கு அச்சமா யிருக்கிறது. உங்கள் அன்பு அபரிமிதமாகப் போய் எங்கள் இளவரசரின் தலையை மொட்டை அடித்துக் காவித் துணி கொடுத்துப் பிக்ஷுவாக்கி விடுவீர்களோ என்று பயப்படுகிறோம்!'' என்றான்.

அவனைச் சுற்றி நின்றவர்கள் பலர் இதைக் கேட்டதும் 'கலீர்' என்று கேலிச் சிரிப்பு சிரித்தார்கள்.

ஆச்சாரிய பிக்ஷுவுக்கு எப்படியோ அச்சமயம் ஒருவித ஆவேசம் ஏற்பட்டு விட்டது. இந்தச் சந்தர்ப்பத்தில் மக்களின் சந்தேகத்தைத் தீர்த்து வைப்பதற்கு ஒரே ஒரு நிச்சயமான வழி மட்டும் உண்டு என்பதை அவர் உள்ளம் உணர்த்திற்று. உடனே முன் பின் யோசியாமல் தம் உள்ளத்தில் தோன்றியதைப் பின்வரும் மொழிகளில் சபதமாக வெளியிட்டார்:

''சக்கரவர்த்தியின் திருக்குமாரரும் பொன்னியின் செல்வருமான இளவரசர் அருள்மொழிவர்மரைப் புத்த சமயத்தை மேற்கொள்ளும்படி நான் கோர மாட்டேன். அவரே முன்வந்தாலும் ஏற்றுக் கொள்ள மாட்டேன். உலகை ஆளப் பிறந்தவரும் உங்கள் அன்பைக் கவர்ந்தவருமான கோமகனைத் தலையை மொட்டை அடித்துக் காவித் துணி அளிக்கும் கைங்கரியத்தை நான் ஒருநாளும் செய்ய மாட்டேன். அதற்கு உடந்தையாகவும் இருக்க மாட்டேன். இவ்வாறு புத்த பகவானுடைய பத்ம சரணங்களின் மீது ஆணையாகச் சபதம் செய்கிறேன்! புத்தம் சுச்சாமி! தர்மம் சுச்சாமி! சங்கம் சுச்சாமி!''

இடிமுழக்கம் போன்ற கம்பீரத்துடன் உணர்ச்சி ததும்பக் கூறிய இந்த மொழிகளைக் கேட்டதும் அங்கே கூடியிருந்த அத்தனை மக்களின் உள்ளங்களும் ஒரு பெரிய மாறுதலை அடைந்தன. பலர் கண்களில் கண்ணீர் ததும்பியது. சிறிதுநேரம் நிசப்தம் நிலவியது.

ஆச்சாரிய பிக்ஷு தொடர்ந்து கூறினார்:

''சோழநாட்டு மக்களின் கண்ணுக்குக் கண்ணான இளவரசரைக் குறித்து நீங்கள் எல்லாரும் இவ்வளவு சிரத்தை கொண்டிருப்பது இயல்புதான். பொன்னியின் செல்வரைக் குறித்த கவலை இப்போது உங்களுக்குத் தீர்ந்து போயிருக்கலாம். இனிமேல் உங்கள் குடும்பம், வீடு, வாசலைப் பற்றிச் சிறிது கவலை கொள்ளுங்கள். மகா ஜனங்களே! இது வரையில் நாம் இந்தப் பக்கத்திலேயே கண்டும் கேட்டுமிராத கொடும் புயல் நம்மை நெருங்கிக் கொண்டிருப்பதாகத் தோன்றுகிறது. அதோ, உங்கள் பின் பக்கமாகத் திரும்பிப் பாருங்கள்!''

ஜனங்கள் திரும்பிப் பார்த்தார்கள். பிக்ஷு கூறியபடியே அவர்களுடைய வாழ்க்கையில் என்றுமே காணாத அதிசயமான காட்சியைக் கண்டார்கள். அதிசயமான காட்சி மட்டும் அன்று. பயங்கரமான காட்சியும்தான்.

கடலானது பொங்கி மேலுயர்ந்து வானத்தில் மேலே மேலே வந்து கொண்டிருந்த கரிய கொண்டல்களைத் தொட்டுக் கொண்டிருந்தது. அந்தக் கரிய நிறத் தண்ணீர் மலையானது நின்ற இடத்தில் நிற்கவில்லை. மேலே மேலே நகர்ந்து வந்து கொண்டிருந்தது. ஜனங்கள் நின்ற இடத்திலிருந்து பார்க்கும் போது அந்த மலையானது அவர்கள் இருக்குமிடம் வரையில் வந்தால் அவர்கள் மட்டுமல்ல, சூடாமணி விஹாரமே முழுகிப் போவது திண்ணம் என்று தோன்றியது.

இந்தக் காட்சியைப் பார்த்து மக்கள் பிரமித்து நின்ற போது, ஆச்சாரிய பிக்ஷு மறுபடியும், ''அதோ, நீங்கள் எல்லோரும் வசிக்கும் நாகைப்பட்டினத்தைப் பாருங்கள்!'' என்று சொன்னார்.

நாகைப்பட்டினம் நகரம் சூடாமணி விஹாரத்துக்குச் சிறிது வடதிசையில் அமைந்திருந்தது. வெகு தூரத்துக்கு வெகு தூரம் பரவியிருந்தது. கடற்கரையை அடுத்துப் பண்டக சாலைகள், சுங்கம் வாங்கும் கட்டடங்கள் முதலியவை இருந்தன. அவற்றுக்கு அப்பால் ஜனங்கள் வசிக்கும் வீடுகள் ஆரம்பமாகிக் கிழக்கு மேற்கிலும் தெற்கு வடக்கிலும் சுமார் அரைக் காத தூரத்துக்கு மேல் பரவியிருந்தன.

கடல் பொங்கிப் பண்டக சாலைகளும், சுங்கச் சாவடிகளும் இருந்த இடத்தையெல்லாம் தாண்டிக் கொண்டுவந்து பட்டினத்தின் தெருக்களிலும் புகுவதற்கு அச்சமயம் ஆரம்பித்திருந்தது.

கடலில் இருந்த படகுகளும் நாவாய்களும் எங்கேயோ ஆகாசத்தில் அந்தரமாகத் தொங்குவது போல் தண்ணீர் மலைகளின் உச்சியில் காட்சி அளித்து அப்படியும் இப்படியும் ஆடிக் கொண்டிருந்தன. படகுகளின் பாய்மரங்கள் பேயாட்டம் ஆடிச் சுக்குநூறுகப் போய்க் கொண்டிருந்தன.

''மகாஜனங்களே! ஒரு காலத்தில் காவேரிப் பட்டணத்தைக் கடல் கொண்டது என்று கேள்விப்பட்டிருக்கிறோம்.




## 23. நானே

அனலில் வறுத்தெடுக்கப்பட்ட மணல். நண்பகல். நெருப்புக் குவியலிலே நடப்பதைப் போன்ற அவதி.

செழுங் கிளைகள் பரப்பிய மரத்தின் கீழ் தவம் இயற்றும் கோலத்தில் குவிந்து கிடந்த நிழல் அவன் கண்களிலே தென்பட்டது.

'சூரியன் அக்கிரமன். இந்தக் கோர வெயிலில் வாட்டி எடுக்கிறானே. ஆண்டவனே, உன் கருணையினால் இந்த நிழலானது என் கண்களில் தென்பட்டது. என் ஆறுதலுக்காக இந்த நிழலைப் படைத்தமைக்கு உனக்கே நன்றி....' எனக் கூறிய அவன் நிழலிலே வந்து அமர்ந்தான்.

அப்பொழுது நிழல் சூரியனைப் பார்த்து, "உன்னால் நான் சமைந்தேன். எனவே, ஆதவனே! என் நன்றியை ஏற்றுக் கொள்ளும்' என்று பிரார்த்தித்தது.

★ ★ ★

கான மயிலாடியது. வான்கோழியும் அதுகண்டு ஆடியது.

இவற்றைப் பார்த்திருந்த புலவனின் கற்பனையில் புதிய உவமை ஒன்று விண்டது. அந்த உவமையைத் தொனிப் பொருளாக வைத்து, தமிழ்க் கவிதை ஒன்று செய்து மகிழ்ந்தனன்.

அக்கவிதையிலே கலந்த ரசிகன், 'மயிலுக்கும் வான்கோழிக்கும், தமிழுக்கும், கவிஞனுக்கும் என் நன்றி' எனப் பாராட்டினான்.

★ ★ ★

கீதையை அர்ஜுனனுக்கு அருளுவது போலும் நமக்குத் தந்தனன் கண்ணன். அதுவே அனைத்தின் அதுவாக அமைந்தது.

அதிலே ஈடுபட்டும், அதன் விசாரணை அநுபவங்களாகவும் 'கீதைக் கதைகள்' என்றும் இதனை எழுத ஒருவன் விழைந்தான்.

அவனைப் பார்த்து, 'நானே கீதைக் கதைகளை எழுதி முடித்தேன்' என ஆரவாரத்துடன் கத்தியது அவனுடைய எழுதுகோல்.

அனைத்தையும் பார்த்துக் கொண்டிருக்கும் அந்த ஏகன் சிரித்துக்கொண்டே யிருக்கிறான்.

(முற்றும்)

— எஸ். பொன்னுத்துரை

---

அம்மாதிரியான விபத்து நமது நாகைப் பட்டினத்துக்கு நேராமல் புத்த பகவான் காப்பாற்றுவாராக! ஆனாலும் நீங்கள் உடனே திரும்பிச் சென்று உங்கள் குழந்தை குட்டிகளையும் உடைமைகளையும் கூடுமானவரை காப்பாற்றிக் கொள்ளுங்கள்!'' என்று ஆச்சாரிய பிக்ஷு தழுதழுத்த குரலில் கூவினார்.

இதைக் கேட்டதும் அந்த ஜனக் கூட்டமானது கடல் அலை போலவே விரைந்து நகரத்தை நோக்கி நகரலாயிற்று. முன்னணியில் நின்றவர்கள் ஓடத் தொடங்கினார்கள். பின்னால் நின்றவர்கள் அவர்களைத் தொடர்ந்து ஓடினார்கள். முதலில் கூட்டமாக நகர்ந்தார்கள்; பிறகு நாலாபுறமும் சிதறி ஓடினார்கள். சில நிமிட நேரத்துக்குள், சற்று முன்னால் பெரும் ஜனத்திரள் நின்று கொண்டிருந்த இடம் வெறுமையாகக் காட்சி அளித்தது.

படகோட்டி முருகய்யனின் மனையாள் ராக்கம்மாள் மட்டும் நின்ற இடத்திலேயே நின்று, ''என் புருஷன்! என் புருஷன்!'' என்று கத்தினாள்.

''தாயே! உன் புருஷனுக்கு ஒன்றும் ஆபத்து நேராது. பத்திரமாகத் திரும்பி வந்து சேருவான். நீ உன்னைக் காப்பாற்றிக் கொள்!'' என்றார் பிக்ஷு.

''இல்லை, இல்லை! என் புருஷனை விட்டுவிட்டு நான் எப்படிப் போவேன்? நானும் கோவிலுக்குள் வருகிறேன்'' என்றாள் ராக்கம்மாள்.

''கூடாது, அம்மா! கூடாது! புத்த சந்நியாசிகள் வசிக்கும் விஹாரத்துக்குள் பெண்பிள்ளைகள் வரக் கூடாது! உனக்குத் தெரியாதா?'' என்றார் பிக்ஷு.

இச்சமயத்தில் அந்த மாபெரும் ஜனக் கூட்டத்திலே ஓடாமல் பின்தங்கி நின்று கொண்டிருந்த மனிதன் ஒருவன் ராக்கம்மாளை அணுகி வந்தான். அவள் காதோடு ஏதோ சொன்னான். அவ

னுடைய கரத்தைப் பிடித்துக் கரகரவென்று இழுத்தான். அவள் அவனுடன் வேண்டாவெறுப்புடன் போகத் தொடங்கினாள்.

''ஆகா! இந்த மனிதன் யார்? இவனுக்கும் இந்தப் பெண்ணுக்கும் என்ன உறவு?'' என்று எண்ணிய வண்ணம் ஆச்சாரிய பிக்ஷு விஹாரத்துக்குள் சென்றார். பொன்னியின் செல்வர் இருந்த இடத்தை அணுகினார். முருகய்யன் இதற்குள் அதிசயமெல்லாம் நீங்கப் பெற்றவனாய் இளவரசர் கூறுவதைப் பக்தியுடன் கேட்டுக் கொண்டிருந்தான்.

''முருகா! இன்றிரவு நீ திரும்பி வந்து என்னைப் படகில் ஏற்றி ஆனைமங்கலத்துக்கு அழைத்துப் போக வேண்டும்'' என்று இளவரசர் கூறினார்.

ஆச்சாரிய பிக்ஷு, ''இளவரசே! இரவுவரையில் காத்திருக்க வேண்டியதில்லை. ஜனக்கூட்டம் கலைந்துவிட்டது. தாங்கள் இப்போதே புறப்பட்டுப் போகலாம்'' என்று சொன்னார்.

பின்னர், வெளியில் நடந்தவற்றைச் சில வார்த்தைகளில் கூறினார்.

''சுவாமி! ஜனங்கள்தான் கலைந்து போய் விட்டார்களே? நான் எதற்காகப் போக வேண்டும்?'' என்றார் இளவரசர்.

''அவர்கள் திரும்பிவர மாட்டார்கள் என்பது என்ன நிச்சயம்? மேலும், பிக்ஷுக்களாகிய எங்கள் வாக்கை மெய்யாக்குவதாகச் சற்றுமுன் சொன்னீர்கள் அல்லவா? அதை நிறைவேற்றி அருள வேண்டும்!'' என்றார் பிக்ஷு.

உண்மை என்னவென்றால், பொங்கி வரும் கடல் அந்தச் சூடாமணி விஹாரத்தைச் சிறிது நேரத்துக்கெல்லாம் முழுக அடித்துவிடும் என்று பிக்ஷுவின் உள்ளத்தில் ஒரு பீதி உண்டாகியிருந்தது. ஆகையால் இளவரசரை அவசரமாக வெளியேற்ற விரும்பினார். ஆனைமங்கலம் கடற்கரையிலிருந்து தெற்கே சற்றுத் தூரத்தில் இருந்தது. ஆகையினால் பொங்கி வரும் கடல் அவ்வளவு தூரம் போய் எட்ட முடியாது. எட்டினாலும் அங்குள்ள மிகப் பெரிய சோழ மாளிகை மூழ்கி விடாது.

இளவரசர் பிக்ஷுவின் கருத்தை ஏற்றுக் கொண்டார். உடனே படகு கொண்டு வருமாறு கட்டளை பிறந்தது.

இதற்கிடையில் அங்கே கூடியிருந்த புத்த பிக்ஷுக்களைப் பார்த்து ஆச்சாரிய பிக்ஷு, ''நாம் கருணையே வடிவமான புத்த பகவானைச் சேர்ந்தவர்கள். இப்போது நாகைப்பட்டினத்து மக்களுக்குப் பெரும் சோதனை நேரிட்டிருக்கிறது. கடல் பொங்கி நகரத்துக்குள் வேகமாகப் புகுவதைக் கண்டேன். புயலின் வேகத்தினால் வீடுகளின் கூரைகள் சிதறிப் பறக்கின்றன. மரங்கள் தட தடவென்று முறிந்து விழுகின்றன. நாகைப்பட்டினத்திலும் அக்கம் பக்கத்திலும் வசிக்கும் மக்களில் வயோதிகர்களும் குழந்தைகளும் எத்தனையோ பேர் தப்பிக்கும் வகை அறியாது தவித்துக் கொண்டிருப்பார்கள். நீங்கள் அனைவரும் நாலாபுறமும் சென்று உங்கள் கண் முன்னால் கஷ்டப்படுகிறவர்களுக்கு உங்களால் இயன்ற உதவிகளைச் செய்யுங்கள். குழந்தைகளையும் வயோதிகர்களையும் முதலில் கவனியுங்கள். சமுத்திர ராஜனின் கோபத்திலிருந்து எத்தனை பேரைக் காப்பாற்றலாமோ, காப்பாற்றுங்கள்! நான் வயதானவன். இங்கேயே இருந்து மாலை நேரத்துப் பூஜையைக் கவனித்துக் கொள்கிறேன்'' என்றார்.

இதைக் கேட்டதும் பிக்ஷுக்கள் அங்கிருந்து அகன்று சென்றார்கள்.

கால்வாயில் படகு வந்து சேர்ந்தது. இளவரசர் ஆச்சாரிய பிக்ஷுவுக்கு வணக்கம் செலுத்தி விடைபெற்று அதில் ஏறிக் கொண்டார். முருகய்யனும் ஏறிப் படகு தள்ளத் தொடங்கினான்.

படகு கண்ணுக்கு மறையும் வரையில் பிக்ஷு அதையே பார்த்துக் கொண்டு நின்றிருந்தார். அவருடைய முகத்தைச் சுற்றி அபூர்வமான ஜோதி ஒன்று பிரகாசப்படுத்திக் கொண்டிருந்தது.

## நாலாம் அத்தியாயம்

# நந்தி மூழ்கியது

படகு கால்வாயில் போய்க் கொண்டிருந்தபோது இளவரசர் நிமிஷத்துக்கு நிமிஷம் கால்வாயின் நீர் மட்டம் அதிகமாகிக்கொண்டிருப்பதைக் கவனித்தார்.

படகு தத்தளித்துக் கொண்டிருந்தது. முருகய்யன் அதைச் செலுத்துவதற்கு வெகு பாடுபட்டுக் கொண்டிருந்தான்.

புயலின் வேகமும் வினாடிக்கு வினாடி அதிகமாகிக் கொண்டிருந்தது. இருபுறமும் மரங்கள் சடசடவென்று முறிந்து விழுந்து கொண்டிருந்தன.

நந்தி மண்டபத்தை நெருங்கிப் படகு வந்தது. இளவரசர் அந்த மண்டபத்தைப் பார்த்தார். நந்தியின் தலைக்கு

மேலே தண்ணீர் வந்திருந்தது. இதிலிருந்து நீர் மட்டம் எவ்வளவு உயர்ந்திருந்தது என்று நன்கு தெரிய வந்தது.

"முருகய்யா! படகைச் சிறிது நிறுத்து!" என்று இளவரசர் கூறினார். முருகய்யன் படகை நிறுத்தினான். ஆனால் அதன் ஆட்டத்தை நிறுத்த முடியவில்லை.

இளவரசர் படகிலிருந்து தாவிக் குதித்து நந்திமண்டபத்தில் இறங்கினார். பின்னர் அதன் அருகில் விழுந்திருந்த ஒரு மரத்தைப் பிடித்துக் கொண்டு மண்டபத்தின் மேல் சிகரத்தின் மீது ஏறினார். அங்கேயிருந்து சுற்று முற்றும் பார்த்தார். கால்வாய்க்குக் கீழ்ப்புறம் முழுதும் ஒரே ஜலப் பிரளயமாக இருந்தது. தென்னந் தோப்பில் பாதி மரங்களுக்கு மேல் அதற்குள் விழுந்துவிட்டிருந்தன. இடைவெளி வழியாகப் பார்த்தபோது கடல் பொங்கி அந்தத் தென்னந் தோப்பின் முனை வரையில் வந்து விட்டதாகத் தெரிந்தது.

வடக்கே, சூடாமணி விஹாரம் இருந்த திசையை அருள்மொழிவர்மர் நோக்கினார். விஹாரத்தின் வெளிப் படிக்கட்டுகள் வரையில் கடல் பொங்கிப் பரவியிருந்தது தெரிந்தது.

பொன்னியின் செல்வருடைய மனத்தில் அப்போது ஓர் எண்ணம் உதயமாயிற்று. அது அவருடைய உடல் முழுதும் சிலிர்க்கும்படி செய்தது.

"முருகய்யா! படகைத் திருப்பிக் கொண்டு போ! விஹாரத்தை நோக்கி விடு!" என்றார் இளவரசர்.

அதிகமாகப் பேசிப் பழக்கமில்லாதவனும் இளவரசரிடம் அளவிறந்த பக்தி கொண்டவனுமான தியாகவிடங்கரின் மகன், ஏன் என்றுகூடக் கேளாமல் படகைத் திருப்பிச் சூடாமணி விஹாரத்தை நோக்கிச் செலுத்தினான்.

வரும்போது ஆன நேரத்தைக் காட்டிலும் போகும்போது சிறிது குறைவாகவே நேரமாயிற்று. ஆனால் இளவரசருக்கோ ஒவ்வொரு விநாடியும் ஒரு யுகமாக இருந்து கொண்டிருந்தது.

படகு விஹாரத்தை அடைந்தபோது பொங்கிவந்த கடல் ஏறக்குறைய விஹாரம் முழுவதையும் சூழ்ந்து கொண்டிருந்தது. நீர் மட்டம் மேலே மேலே ஏறிக் கொண்டுமிருந்தது.

ஈழ நாட்டிலுள்ள விஹாரங்களைப் போல் நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரம் அக்காலத்தில் அவ்வளவு கம்பீரமாகவோ உயரமாகவோ அமைந்திருக்கவில்லை. இன்னும் கொஞ்சம் தண்ணீர் மேலே ஏறினால் விஹாரத்தின் மண்டப சிகரம்கூட முழுகிவிடும் என்ற நிலைமை ஏற்பட்டிருந்தது.

இளவரசர் படகிலிருந்து தாவித் தண்ணீரில் முழுகாமலிருந்த ஒரு மண்டபத்தின் மேல் தளத்தில் குதித்தார். அங்குமிங்கும் பரபரப்புடன் ஓடினார். விஹாரத்தின் அடித்தளத்துக்கு அவர் போகாமல் மேல்மாடங்களில் ஒவ்வொரு பகுதியாகத் தேடிக் கொண்டு வந்தார். மேல் மாடங்களிலேயே சில இடங்களில் மார்பு அளவு தண்ணீரில் அவர் புகுந்து செல்ல வேண்டியதா யிருந்தது. மேலும் மேலும் ஏமாற்றம் ஏற்பட்டுக் கொண்டிருந்தது. கடைசியில், கௌதம புத்தரின் கம்பீரமான உருவச் சிலை அமைந்திருந்த இடத்துக்கு வந்து சேர்ந்தார். அந்தச் சிலையின் மார்பு அளவுக்குத் தண்ணீர் ஏறியிருந்தது. அங்கே இளவரசர் நின்று நன்றாகச் சுற்று முற்றும் பார்த்தார். அவருடைய வாயிலிருந்து எழுந்த மகிழ்ச்சியும் வியப்பும் கலந்த 'ஆஹா!' என்ற ஒலி அவர் தேடி வந்ததை அடைந்து விட்டார் என்பதற்கு அறிகுறியாக இருந்தது.

ஆம்; புத்தர் சிலையின் அடியில் தண்ணீருக்குள்ளே பகவானுடைய பத்ம சரணங்கள் இரண்டையும் இறுக்கக் கட்டிக் கொண்டு ஆச்சாரிய பிக்ஷு உட்கார்ந்து கொண்டிருந்தார்.

பொன்னியின் செல்வர் தண்ணீரில் முழுகிப் பிக்ஷுவின் கரங்கள் இரண்டையும் சிலையிலிருந்து பலவந்தமாக விடுவித்துவிட்டு அவரைத் தூக்கி எடுத்தார். தண்ணீருக்குள்ளே பிக்ஷுவைத் தூக்குவது இலேசாக இருந்தது. தண்ணீருக்கு வெளியே வந்த பிறகு அவ்வளவு இலேசாக இல்லை. ஆஜானுபாகுவும் நல்ல பலிஷ்டருமான அந்த பிக்ஷுவின் உடல் கனம் இளவரசரைத் திணறச் செய்தது.

"முருகய்யா! முருகய்யா!" என்று குரல் கொடுத்தார்.

"இதோ வந்தேன்!" என்று சொல்லிக் கொண்டே முருகய்யன் படகைக் கொண்டு வந்தான்.

பொன்னியின் செல்வர் ஆச்சாரிய பிக்ஷுவைத் தூக்கிக் கொண்டு படகை நோக்கி விரைந்து சென்றார். அவருடைய கால்கள் தடுமாறின.

(தொடரும்)

இல்லங்களில் வளர் செல்லங்கள்

# அணிலுக்குச் செய்த அணில் பணி

எதிராஜ் மகளிர் கல்லூரியில் பி. எஸ்ஸி. (உயிரியல்) பயிலும் மாணவி குமாரி எஸ். ஜானகியின் வீட்டுக்குள் நுழையும்போது ஒரு பச்சைக் கிளி தன் இனிய குரலால் நம்மை வரவேற்கிறது. கிளி தவிர, அணில், கீரி, நாய் முதலிய பிராணிகள் வளர்ப்பதிலும் ஆர்வம் காட்டுகிறார் ஜானகி.

''இந்தக் கிளி விலைக்கு வாங்கியதா, அல்லது...''

''விலைக்கு வாங்கியதில்லை. பக்கத்திலுள்ள ஒரு மரத்தில் ஒரு கிளிக் கூட்டம் வந்து தங்கியபோது கல்லெறிந்து யாரோ ஒரு கிளியை வீழ்த்தி விட்டார்கள். அந்த அடிபட்ட கிளியை எடுத்து வளர்க்க ஆரம்பித்தேன். இதற்குச் சுமார் மூன்று வயதிருக்கும்.

''அணில்...?''

''உத்தரத்தில் உள்ள பொந்தில் கூடு கட்டியது ஓர் அணில். நாளடைவில் எங்கள் எல்லாரிடமும் சகஜமாகப் பழக ஆரம்பித்தது. அணில் பயந்த சுபாவம் உள்ளது. கையில் உணவை வைத்திருந்தால் அது வந்து சாப்பிடும். பின்பு அதனைக் கையில் எடுத்தாலும் தைரியமாக வந்து விளையாடும்.''

''அணில் வளர்ப்பிலிருந்து அதனுடைய பழக்க வழக்கங்களில் ஏதாகிலும் புதுமை கண்டிருக்கிறீர்களா?''

''அணிலின் பற்கள் உறுதியானவை. சாதம், பழங்கள் தவிர, அவற்றுக்குக் கடித்து உண்ணும்படியான உணவும் கொடுக்க வேண்டும். கொய்யாப் பழத்தை விட, செங்காயாக உள்ள கொய்யாவின் விதைகளை அவை கடித்துப் புசிக்க விரும்பும். முருங்கைப் பூ, முருங்கைக்காய் என்றால் அணிலுக்கு உயிர்! அணில் குட்டி போட்டவுடன் ஒரு குட்டி உத்தரத்திலிருந்து கீழே விழுந்து விட்டது. கீழே விழுந்த குட்டியைத் தாய் அணில் திரும்பச் சேர்த்துக்கொள்ளவில்லை. பேனாவுக்கு மசி போடும் கண்ணாடிக் குழாய் மூலம் அணில் குட்டிக்குப் பசும் பால் புகட்டி வளர்த்தேன். குட்டி அணிலுக்கு நீர் கலந்த பால் தான் கொடுக்க வேண்டும். அசல் பாலை அதனால் ஜீரணிக்க முடியாது.''

''அணிலின் பற்கள் உறுதியானவை என்றீர்களே—அது நம்மைக் கடிக்காதா?''

''அணில் கர்ப்பமாக இருக்கும்போது மட்டும் கடிக்கிறது. மற்ற சமயங்களில் கடிப்பதே இல்லை. குட்டி போட்ட பிறகும் சிறிது காலம் வரை அதனிடம் கவனமாக இருக்க வேண்டும். தப்பித் தவறிக் கடித்துவிட்டால், நம் உடலில் ரத்தம் வெளிப்படும் அளவுக்கு அதன் பற்கள் கூர்மையானவை.

''அணில் குட்டி பிறந்ததும் சுமார் இரண்டு அங்குல நீளம் இருக்கும். ஒரு தடவைக்கு மூன்று நான்கு குட்டிகள் போடும். தேங்காய் நாரினால் அணில் கூடு கட்டித் தன் குட்டிகளைப் பேணிக் காக்கும் திறமை நமக்கு வியப்பளிக்கும்.''

குமாரி ஜானகிக்குக் கீரிப்பிள்ளை வளர்த்த அனுபவமும் உண்டு! ''கீரி வெகு துணிச்சல் உள்ள பிராணி. சின்னக் குட்டியாக இருந்தாலும் மிகப் பெரிய பிராணிகளைக் கூட அது பயப்படாமல் தாக்கத் துணியும். குட்டிக் கீரி பெருச்சாளியைத் துரத்தித் தாக்கும். பொழுது புலரும் நேரத்திலும், மாலை நேரத்திலும் அது வெகு சுறுசுறுப்பாக இயங்கும். நடுப்பகல் நேரத்தில் அது வெளிப்படுவதில்லை. நிலவொளியில் மகிழ்ச்சியுடன் ஓடி விளையாடும். நாம் அதனிடம் அன்பு செலுத்தினால் அது நம்மிடம் நன்றாக நெருங்கிப் பழகும்'' என்று கூறுகிறார் குமாரி ஜானகி.

உயிரினங்களிடம் உயிருக்குயிராகப் பழகுகிறார் இந்த உயிரியல் மாணவி.

பேட்டி: பாணன்





இடது: அன்புக்கு அடங்காத அணில்.
வலது: கிளிக்குப் பாராட்டுதல்.



திடீர் என்று தன் உருவத்தைச் சுருக்கிக் கொண்டு, கட்டியிருந்த கட்டுக்களையெல்லாம் உதறித் தள்ளிவிட்டு, மறுபடியும் பெரும் வடிவத்துடன், எரியும் வாலுடன் கிளம்பிப் பெரியதொரு மாளிகை மேல் குதித்து ஏறி நின்றான். கையில் ஒரு கம்பத்தைப் பிடுங்கிக்கொண்டு அதை அனைவரும் நடுங்கச் சுழற்றினான்.

பிறகு அங்கிருந்த மாளிகை மாளிகையாகத் தாவிக் குதித்து ஒவ்வொரு வீடும் பற்றி எரிய நெருப்பு வைத்துச் சென்றான். சிறிது நேரத்துக்குள் காற்றும் வீசிற்று. நகரமெல்லாம் தீப்பற்றி ஆகாயமளாவ எரிந்தது. அரக்கர்களும் பெண்களும் குழந்தைகளும் 'குய்யோ முறையோ' என்று கதறிக் கொண்டு இங்குமங்கும் அலைந்தார்கள்.

'இந்தக் குரங்கு யமனே!' என்று சிலர், 'இவன் அக்கினி தேவனே' என்று சிலர், இன்னும் இப்படிப் பலவிதமாக ராக்ஷசர்கள் கத்திக்கொண்டு, பயந்து எரியும் வீடுகளிலிருந்து தப்பி ஓடினார்கள்.

தான் பட்ட இம்சையை நினைத்து எரியும் லங்கையைப் பார்த்து ஹனுமான் மிக்க மகிழ்ச்சி அடைந்தான். திரிகூட மலையில் ஓர் உயர்ந்த இடத்திலிருந்து இதைப் பார்த்துத் திருப்தியடைந்து பிறகு கடலில் போய் மூழ்கி வாலில் இருந்த நெருப்பை அணைத்து விட்டு நின்றான்.

''ஐயோ, என்ன செய்தேன்! கோபத்தினால் மதியிழந்தேன். எவ்வளவு பலம் இருந்து என்ன பயன்? எவ்வளவு சாமர்த்தியம், ஐசுவரியம் இருந்தாலும் கோபத்தை அடக்கத் தெரிந்தாலல்லவோ எல்லாம் பயன்படும். சீதையும் இந்தப் பெருந் தீயில் மாண்டல்லவா போயிருக்க வேண்டும்! சர்வநாசமாக அல்லவா முடிந்தது. நான் கோபத்தில் செய்த காரியம்! ஐயோ! என்னைப் போன்ற மூடன் இல்லை. பாவி இல்லை! அரக்கர்கள்பேரில் கொண்ட கோபம் சீதையைக் கொன்றது. இனி நான் இங்கேயே உயிர் நீத்து என் வாழ்க்கையையும் வெட்கத்தையும் தீர்த்துக் கொள்ள வேண்டும்!'' என்று தாங்க முடியாத துக்கத்தில் மூழ்கினான்.

அப்போது ஆகாயத்தில் யாரோ பேசுவது கேட்டது. லங்கா நகரம் தீப்பற்றி எரிவதைக் கண்ட சாரண யக்ஷர்கள் ஆகாயத்தில், ''ஆஹா! என்ன அற்புதச் செயல்! ஹனுமானுடைய பராக்கிரமம் வாழ்க! சீதை யிருக்கும் இடம் தவிர மிகுதி லங்கை முழுவதும் தீப்பற்றி எரிகிறது'' என்று பேசி மகிழ்ந்தார்கள்.

இது ஹனுமான் காதில் பட்டது. ''ஓ! பிழைத்தேன்! சீதையல்லவோ என் உயிரைக் காப்பாற்றினாள். அவள் புண்ணியமல்லவோ நெருப்பு என்னைத் தீண்டாமல் வாலில் குளிர்ந்து நின்றது. நெருப்பு அந்தக் கற்புத் தேவியை எப்படித் தீண்டும்? அக்கினியை அக்கினி என்ன செய்யும்? நான் வைத்த நெருப்பு சீதையிடம் செல்லவில்லை. அக்கினி தேவனே உதவி யிருக்கிறான். ராம காரியமல்லவா? சமுத்திர ராஜனும் மைனாகமும் உதவவில்லையா ?'' என்று இவ்வாறு எண்ணி உடனே அசோக வனம் சென்றான்.

சிம்சுபா மரத்தடியில் உயிருடன் உட்கார்ந்திருந்த சீதை

# ராமாயணம்

## -ராஜாஜி-

யைக் கண்ணால் கண்டு மிக மகிழ்ந்து, நமஸ்கரித்து, ''தாயே! தாங்கள் க்ஷேமமாய் இருப்பதைக் கண்டேன். இது தங்கள் சக்தி. என் பாக்கியம். நான் போய் வருகிறேன்'' என்றான் ஹனுமான்.

ஜானகியும், ''நீயல்லவோ வீரன்! உன்னால் ஆகாத காரியமில்லை. சீக்கிரம் என் நாதன் வந்து அரக்கர்களை வீழ்த்தி, என்னை அடையச் செய்வாய். இது நீ ஒருவனே செய்ய முடியும்'' என்றாள்.

''கோடிக்கணக்கான வானர சைன்யத்துடன் சுக்ரீவன் ராமலக்ஷ்மண வீரர்களுடன் இங்கு வந்து சேருவான். ராவணனும் அவன் துஷ்டக் கூட்டமும் மடிவார்கள். ரகுநந்தனன் உம்முடன் அயோத்திக்குத் திரும்பிப் போவான். துக்கப்படாதீர். மங்களம். சீக்கிரம் அவர்கள் வருவார்கள் என்று நிச்சயமாக இருப்பீராக.''

இவ்வாறு சமாதானப்படுத்தி விடைபெற்றுக் கொண்டு சென்றான். கடற்கரையில் அரிஷ்ட மலையென்ற அழகிய மலையின் பேரில் ஏறி ஆகாயத்தில் கிளம்பினான்.

வழியில் மைனாக மலை தன்னை எதிர்பார்த்து நின்றதைக் கண்டு அதைக் கையால் அன்போடு தடவிக் கொடுத்து விட்டு, நிற்காமல் வில்லினின்று செல்லும் அம்பின் வேகத்தோடு நேராகச் சென்றான். மகேந்திர மலையின் சிகரம் தெரிந்ததும் அக்கரை வந்தது என்று அறிந்து ஒரு பெரும் கர்ஜனை செய்தான். ஆகாயத்தில் கருடனைப்போல் வரும் ஹனுமானைப் பார்த்துக் கொண்டிருந்த வானரர்கள், ''வந்துவிட்டான்! வந்துவிட்டான்!'' என்று ஆரவாரம் செய்தார்கள். அதுவரையில் கவலையும் கண்ணீருமாக இருந்த வானரர்கள் அடங்கா மகிழ்ச்சியடைந்து குதித்தார்கள்.

ஜாம்பவான், ''நிச்சயம் வெற்றியுடன் திரும்பி வருகிறான். இல்லாவிடில் இப்படிக் கர்ஜிக்க மாட்டான்'' என்றான். எல்லாரும் மரங்களிலும் குன்றுகளிலும் ஏறி ஹனுமான் ஆகாயத்தில் பறந்து வருவதைப் பார்த்துக் கொண்டே மகிழ்ச்சியோடு நின்றார்கள்.

மலைகளும் மரங்களும் எல்லாம் வானரர்களால் நிறைந்து விளங்கும் காட்சியை ஆகாயத்திலிருந்து பார்த்து ஹனுமான் மகிழ்ச்சி அடைந்தான். ஆரவாரத்துக்கிடையில் மகேந்திரமலை மேல் இறங்கினான்.

## 75. வானரங்களின் களியாட்டம்

ஹனுமானைப் பார்த்து மகிழ்ச்சி மேலிட்ட வானரர்கள் மகேந்திர மலை மேல் கூடினார்கள். விருத்தனான ஜாம்பவான் வாயுபுத்திரனை அன்புடன் வரவேற்று, ''நடந்ததை யெல்லாம் நமக்குச் சொல். எல்லாரும் அனுபவிக்கலாம். எப்படித் தேவியைக் கண்டாய்? அப்போது என்னவெல்லாம் நடந்தது? அவள் எப்படியிருக்கிறாள்? உடல் நிலை மன நிலை எல்லாவற்றையும் பற்றிச் சொல். ராவணன் எப்படி நடந்து கொள்கிறான்? அருமை ஆஞ்சனேயனே! எல்லாம் உள்ளபடி நமக்குச் சொல்வாய். அதன் மேல் நாம் இனி என்ன செய்ய வேண்டியது என்பதை யோசித்துத் தீர்ப்பதற்கு அனுகூலமாக இருக்கும்'' என்றான்.

ஹனுமான் மனத்தால் சீதையைத் தியானித்து நமஸ்கரித்து விட்டு அவர்களுக்கு விஷயம் சொல்ல ஆரம்பித்தான் :

''மகேந்திர மலைமேலிருந்து நான் ஆகாயத்தில் கிளம்பியது உங்களுக்குத் தெரியுமே. கிளம்பிச் சமுத்திரத்தைத் தாண்டி ஆகாயத்தில் சென்று கொண்டிருந்த போது திடீர் என்று கடலிலிருந்து முன் அங்கே இல்லாத ஒரு மலை கிளம்பிற்று. 'ஓகோ ! என்னைத் தடுப்பதற்கு இது ஒன்று ஏதோ நிமிர்ந்து என் வழியை அடைக்கிறது. இதை உடைத்து எறிய வேண்டும்' என்று நிச்சயித்தேன். நிச்சயித்துப் பொன் மயமான அந்த மலையை என் வாலால் அடித்தேன். மலை அந்த அடியை வினயமாக வாங்கிக் கொண்டு மிக இனிய குரலில், 'மகனே! நான் பகைவனல்ல. உன் தந்தையால் காப்பாற்றப்பட்டு நன்றி மறவாதவன் நான். என்னைக் கொல்ல வந்த இந்திரனுடைய வஜ்ராயுதத்தினின்று தப்பி உன் தகப்பனார் வாயுவினுடைய உதவியால் பறந்து கடலில் மூழ்கி மறைந்து பிழைத்திருக்கிறேன். முன் நாட்களில் மலைகளெல்லாம் சிறகு பெற்று உலகம் பயந்து நடுங்கும்படி இங்குமங்கும் ஆகாயத்தில் பறந்து கொண்டிருந்தன. அந்தக் காலத்தில் இந்திரன் உலகத்தின் பெரும் பயத்தைத் தீர்க்க மலைகளைத் துரத்தித் துரத்தி அவற்றின் சிறகுகளை வெட்டித் தள்ளினான். அப்போது வாயு பகவான் எனக்குச் செய்த உதவியால் அல்லவா நான் சிறகுடன் பறந்து கடலில் மூழ்கித் தப்பினேன்? அந்த உதவியை நான் மறக்கவில்லை. நீ ஆகாயத்தில் தாவி யாரும் செய்யாத கஷ்டமான காரியத்தைச் செய்கிறாய். உனக்குச் சிரமம் தீர வந்து நிற்கிறேன். என் மேல் கொஞ்ச நேரம் தங்கி இளைப்பாறிப் பிறகு ராம காரியத்தைப் பூர்த்தி செய்யச் செல்வாய்' என்றான். நான் அந்த உபசாரத்தைப் பெற அவகாசமில்லை என்று சமாதானம் சொல்லி, மலையிடம் விடைபெற்றுக் கொண்டு தங்காமல் சென்றேன்.''

இவ்வாறே பிறகு ஒன்றன்பின் ஒன்றாகச் சமுத்திரம் தாண்டும்போது நடந்த நிகழ்ச்சிகள், லங்கா நகரம் பிரவேசித்தபோது நடந்த நிகழ்ச்சிகள் நகரத்திலும் ராவணனுடைய அரண்மனையிலும் தேடிச் சீதையைக் காணாமல் போனது, பிறகு அசோகவனத்தில் போய்ச் சீதையைக் கண்டது, ராவணன் வந்து சீதையை வருந்திக் கேட்டுக் கொண்டது, சீதை அவனைத் துச்சமாக எண்ணிப் பேசியது, ராக்ஷசன் சீதையைப் பயமுறுத்தியது, ராக்ஷசிகள் சீதையைப் பலவாறு தொந்தரவு செய்து பயமுறுத்தியது, சீதை உயிர் நீக்க நிச்சயித்தது, பிறகு சீதையுடன் தான் பேசி ராமனைப் பற்றிச் செய்தி சொன்னது, எல்லாம் ஒன்று விடாமல் ஹனுமான் வானர வீரர்களுக்குச் சொன்னான்.

சீதை தனக்குச் சொன்னதையெல்லாம் கண்களில் நீர் ததும்பச் சொன்னான். பிறகு வனத்தை அழித்ததையும், ராக்ஷச வீரர்களைக் கொன்றதையும், இந்திரஜித்தால் கட்டப்பட்டு ராவணன் முன் கொண்டு போகப்பட்டதையும், வாலுக்குத் தீ வைக்கப்பட்டதையும், நகரத்தைத் தான் கொளுத்தியதையும் எல்லாம் நடந்தவாறு முழுக் கதையையும் வானரர்களுக்கு ஹனுமான் சொன்னான். (தொடரும்)

இந்தியாவின்
உன்னத
சோப்புகளைத்
தயாரிக்கும்

# டாடா

இப்போது
வழங்குவது




# மலபார் சந்தன சோப்

*மேனியழகை சோபிக்கச்
செய்யும் பரம்பரையான
சோப்*

நீங்கள் மலபார் சந்தன சோப் உபயோகித்து நீராடுங்கள். இதன் மென்மையான தொட்டுணர்ச்சியால் உங்கள் சருமம் புத்துணர்வு பெற்றுக் கிளுகிளுக்கும். உங்கள் மேனி மாசு மறுவற்ற அழகு பெற்று மினுமினுக்கும்; ஓர் இன்ப உணர்ச்சி பொங்கி வரும். மலபார் சந்தன சோப், தூய்மையான சந்தன எண்ணெயிலிருந்து தயாரிக்கப் படுகிறது. இதை உபயோகித்தால், உங்கள் சருமம் இயற்கை எழிலுடன் ஒளி வீசும். இதன் மென்மையான நறுமணமோ மணிக்கணக்கிலே நீடித்து நிலைக்கும்.

**டாடா தயாரிப்பு**

Bensons-4301 TM



"பழைமையான கரகரப்-
பான பற்பொடிகள்
உங்கள் ஈறுகளுக்கும்,
பற்களுக்கும் தீங்கு
இழைக்கக்கூடும்...!"

# கால்கேட் பற்பொடி உபயோகித்து உங்கள் பற்களை-யும், ஈறுகளையும் பாதுகாத்துக் கொள்ளுங்கள்! வாய் நாற்றத்தையும் அகற்றுங்கள்!

பழைமையான கரகரப்பான பற்பொடிகள் உங்கள் ஈறுகளைச் சேதப்படுத்தி, பல் எனாமலைச் சிதைக்கக்கூடும். கால்கேட் பற்பொடி மிகவும் மென்மையானது. அது உங்கள் ஈறுகளுக்கு இதமளிக்கும் போதே, அதில் கலந்துள்ள மெருகேற்றும் பொருள் பற்களின் மீது படிந்துள்ள கறைகளைப் போக்கி, பற்களைச் சுத்தமாக வெண்மை பளிச்சிடச் செய்கிறது. கால்கேட்டின் வளமான நுரை பல் இடுக்கு களில் ஊடுருவி வாய்நாற்றம் மற்றும் பற்சிதைவுக்குக் காரணமான கிருமிகளை அகற்றுகிறது. அதனால்தான் கால்கேட் பற்பொடி வாய் நாற்றத்தை உடனே நிறுத்தி, பற்சிதைவையும் எதிர்க்கிறது. அதன் குளுமையான இன்மணத்தையும் நீங்கள் பெரிதும் விரும்புவீர்கள்!

நவீன
பல் பராமரிப்பு முறைகளே **சிக்கனமாக**
இருக்கும்போது பழைமையான
பற்பொடிகளை ஏன் உபயோகிக்க வேண்டும்!

உங்கள் குடும்பத்திற்கு
எகானமி சைஸ் கால்கேட்
பற்பொடியை இன்றே வாங்குங்கள்!
ஒரு டப்பா மாதக்கணக்கில் வரும்!

...பூரணமான பல் பரா
மரிப்பிற்கு விஞ்ஞான
முறையில்
உருவாக்கப்பட்ட
கால்கேட் டூத் ப்ரஷ்
உபயோகியுங்கள்.








# என் தெய்வம்

இன்று எழுபத்தொரு வயதை எட்டியிருக்கக்கூடிய அமரர் கல்கியின் நினைவுநாளைக் கொண்டாடினார்கள் அடையாறு கல்கி பைன் ஆர்ட்ஸ் குழுவினர். கல்கியின் ''என் தெய்வம்'' என்னும் சிறுகதையை ஒரு முழுநேர நாடகமாக்கி மேடையேற்றினார் திரு கூத்தபிரான்.

டிசம்பர் 21ந் தேதி மயிலை பைன் ஆர்ட்ஸ் அரங்கில் நடந்த இந்த விழாவில், நாடகத்துக்கு முன்னுரையாக திரு ஏ. ஜி. வெங்கடாச்சாரியாரும் திரு த. நா. குமாரஸ்வாமியும் கல்கியின் நினைவுக்கு அஞ்சலி உரையாற்றினார். ஒருபுறம் வாசகரை மகிழ்விக்கும் எழுத்தாளர் பணியைப் புரிந்தபடி, மற்றொரு புறம் சமூகப் பணியில் பெருஞ்சாதனைகளை நிகழ்த்திய கல்கியின் வியப்பூட்டும் ஆற்றலை விவரித்தார், ஏ. ஜி. வி. 'முதலில் அவர் ஒரு தேசபக்தர்; பின்னரே எழுத்தாளர்' என்று சொல்லி, தமிழ் எழுத்தாளர் தலைவராக விளங்கி, அவர்கள் நிலையை உயர்த்தியதை யெல்லாம் நன்றியுடன் நினைவுகூர்ந்தார். 'இவரைப் போன்றவர்' என்ற ஒப்புவமைக்கு அடங்காதவர் கல்கி என்று கூறிக் காரணம் காட்டினார் திரு குமாரஸ்வாமி. ஆரம்ப நாளில் ஆனந்த விகடன் நடத்திய மொழிபெயர்ப்புச் சோதனைகளைப் பற்றியும் கருத்துள்ள கதைகளில் கல்கிக்கு இருந்த ஈடுபாட்டையும் தெரிவித்தார்.

அத்தகைய ஒரு கதையே 'என் தெய்வம்.'

படாத பாடு பட்டுத் தன்னை வளர்த்து ஆளாக்கிய ஏழை விதவைத் தாயைத் தெய்வமாகக் கருதும் சாம்பமூர்த்திக்கு ஒரு பேரதிர்ச்சி — ஊரார் அந்தத் தெய்வத்தின் நடத்தையைப் பற்றிச் சந்தேகித்து வம்பு பேசும்போது. அடக்க முடியாத ஆத்திரம் கொண்ட மகனைச் சமாதானப்படுத்த, ஆற்ற முடியாத துக்கத்துடன் செல்லம்மாள் வெளியிடும் தன் பூர்வ கதைதான் இந்தக் கதை.

உள்ளத்தை நெகிழ வைக்கும் இந்தச் சிறுகதையை மேடைக்கு ஏற்ப அமைத்தும், நாடகச் சுவை கூடுவதற்குப் புதுப் பாத்திரங்களைச் சேர்த்தும், நகைச்சுவை பொருந்தத் தாமே நடித்தும், இயக்குனராயும் பாடுபட்டுள்ளார் கூத்தபிரான்.

முன் பகுதியில் மகன் சாம்பமூர்த்தியாகவும் பின் பகுதியான 'பூர்வகதை'யில் செல்லத்தின் கணவன் அனந்தராமனாகவும் இரட்டை வேடம் ஏற்றுள்ளார் ஜெய்சங்கர். இளமையின் துடிப்பும், குறும்பும், தாயிடம் பக்தியும் கொண்ட மகனாக நடிக்கும்போது ஒரு பேஷ் வாங்குகிறார்; அழகு மனைவியின் பொறுப்பான கணவனாக இருந்தபடி, தற்கொலைக்குத் துணிந்த ஒரு பெண்ணையும் ரகசியமாகக் காப்பாற்ற நேரும் இக்கட்டில் ஈடு கொடுக்கும்போதும் உணர்ச்சி நடிகராக ஒரு பாராட்டுப் பெறுகிறார்.

முதற் பகுதியில் பதின்மூன்றும் வாய்ப்பாடு ஒன்றை வைத்துக் கொண்டு தருமு மாமி அத்தனை பேரையும் ஓட ஓட விரட்டுவதையும் சரி, பின் பகுதியில் பஞ்சு தன் மனைவியைப் பிரின்சிபாலாக்கித் தபால் மூலம் சமையல் சொல்லித் தர முயலும் திட்டமும் சரி, நல்ல நகைச்சுவைக் காட்சிகளாக விளங்குகின்றன. நாடகம் முழுவதும் உதிரிச் சிரிப்புக்கள் பல. வத்தி வைக்கும் வைத்தி பாத்திரத்துக்கு இன்னும் கொஞ்சம் 'கனம்' கூட்ட வேண்டும் நாடகாசிரியர்.

நாடகக் காட்சி அமைப்பில் காட்டியுள்ள கவனம், விறுவிறுப்புக்கும் தரத்திற்கும் உதவுகிறது. பளபளக்கும் இந்நாடகத்துக்குப் போகப் போக இன்னும் மெருகு கூடும்.

— அ. ஆசீர்வாதம்



| | | |
|---|---|---|
| அனந்தராமன் | - | ஜெய்சங்கர் |
| செல்லம் | - | சிவகாமி |

இருட்டிப்போய் வெகு நேரமாகியும் இன்னும் யாமினி வீட்டுக்கு வரவில்லே. அத்தைக்கு விசாரம் பிடுங்கித் தின்றது. ஊரிலே, தெருவிலே கசமுச வென்று என்னவோ பேசிக் கொண்டிருந்தார்கள்; பெண்ணைப் பெரிய படிப்புக்கு அனுப்பியிருப்பதே பெரிய வயிற்றெரிச்சல்; ஊர்ப் பெண்களைப் போல் இல்லாமல் எங்கேயோ உயரத்தில் இருக்கிறுளே என்று இன்னும் பாதி குடைச்சல். ஏதாவது தூளி அகப்பட்டால் போதாதா, தூளியை நிர்த்தூளியாக்கிப் பேச!

அவர்கள் பேசுவது கிடக்கட்டும். அவளுக்கே யாமினியிடம் ஏற்பட்டிருந்த மாறுதல் கவலேயாக இருந்தது. அவள் முன்போல் இல்லே. எதற்கு ஆசைப்பட்டாலும் அத்தையைக் கேட்காமல், அத்தை சம்மதமில்லாமல் செய்ய மாட்டாள்; பேசவும் மாட்டாள். அத்தை கையால் செய்து கொடுத்தால்தான் ஆனந்தம். அத்தை சொல்லி விட்டால் அதற்கு அப்பீலே இல்லே. இப்போது எல்லாம் சிறிது மாறியிருந்ததாக அத்தைக்குச் சூட்சுமமாகத் தெரிந்தது. சில விஷயங்களே யாமினி தானே செய்து கொள்ள விரும்பினுள். ஓட்டுக்குள் உடம்பைச் சுருக்கிக் கொள்வதுபோல் கேட்டால்கூட மனம்விட்டுப் பேச முடியாமல் வார்த்தைகளே விழுங்கிக் கொண்டிருந்தாள். அவளுக்கென்று இப்போது சில தனி ருசிகள், விருப்பங்கள், அபிப்பிராயங்கள் உண்டாகியிருந்தன போல் தெளிவாகத் தெரிந்தது. இதெல்லாம் பருவ வயதின் கோளாறு, அதிகப் படிப்பின் கோளாறு என்று அத்தைக்குப் புரியவில்லே. எதுவாக இருந்தாலும் யாமினி கையை விட்டு வழுக்கினுற் போல் நழுவிக் கொண்டிருந்தது அவளுக்கு வேதனையையும் விசாரத்தையும் கொடுத்தது.

''ஏங்க்கா, வாசல் திண்ணையிலே வந்து உக்கார்ந்திருக்கே, இருட்டிலே?'' என்று கேட்டுக் கொண்டே முத்துசாமியும் எதிர்த்திண்ணையிலே வந்து அமர்ந்து கொண்டார்.

''.....ம்... என்னவோ உக்கார்ந்திருக்கேன், போயேன் கெடக்கு!''



''இன்னும் பாப்பா கோயில்லே யிருந்து வரல்லியா?''

''கோயிலுக்குத்தான் போயிருக் காள்னு தெரியுமா, உனக்கு?''

''அங்கேதான் போயிருப்பா. வேறே எங்கே போயிருக்கப் போறு?''

''சரி, கோயிலுக்கே போகட்டும்; அதுக்குன்னு இவ்வளவு நாழியா? மணி எட்டாகப் போறது. ஒரு பெண் ணுக்கு இத்தனே நாழிகைக்கு மேலே என்ன வேலே?''

''கோயிலுக்குப் போனுல் கொஞ்சம் நேரம்தான் ஆகும். யாராவது பேசப் பிடிச்சிண்டிருந்தா என்ன செய்யறது?''

''சரிதான், நீயே சமாதானம் சொல்ல வர்றியா எனக்கு? அப்ப நான் பேசல்லே — உனக்கே ஒண்ணும் இல் லேன்னு எனக்கு என்ன வந்தது—மூலே யிலே கிடக்க வேண்டிய கிழத்துக்கு!''

''நான் ஒண்ணும் தப்பாச் சொல் லல்லியே — இப்ப வந்துடுவான்னுதான் சொல்ல வர்றேன்.''

''கல்லூரியிலே படிச்சவ எப்ப வேணு வரலாம்; வரட்டுமே. நீ ஏதாவது தப்பாச் சொல்லுவியா, என்ன? சரியா கத்தான் சொல்லுவே. அதுக்குமேலே சரியாகத்தான் எதுவும் செய்வே. 'படிச்சது போதும்; ஊருக்கு இழுத் துண்டு வந்து சேரு'ன்னு சொல்லி அனுப்பிச்சும், அவா சொன்னு, இவா சொன்னுன்னு விட்டுட்டு வந்தே பாரு அது ஒண்ணே போதுமே. அதுக்கு மேலே என்ன வேணும்? ஊரிலே பேசி ஞல் என்ன, தெருவிலே பேசினு என்ன? அவளும் இஷ்டத்துக்கு வரலாம்; நீயும் கவலே யில்லாமெ எனக்கென்னன்னு இருக்கலாம்!''

அக்காவைப் பற்றித் தம்பிக்குத் தெரி யும்; அதனுல் பேசாமல் இருந்தார்.

''இந்தக் கவலேயெல்லாம் நீங்களே பட்டுண்டு இருங்கோன்னு அந்த மகராசி என் தலேயிலே கட்டிட்டுப் போயிட்டா. நான் படறேன் இப்போ. நான் வேறெதுக்கு இருக்கேன் உசி ரோடே? இதுக்குத்தான்.....''

அதற்குள் யாரோ வருவது போலத் தெரிந்தது. ஜாதிப்பூ வாசனே குப்பென்று மணத்தது. யாமினிதான் குறட்டில் ஏறி வந்தாள். அப்பாவையும் அத்தை யையும் பார்த்து விட்டு உள்ளே போகப் போனுள்.

''இந்தாடி சித்தே நில்லு. அப்புறம் போகலாம் உள்ளே!''

''என்ன அத்தே?''

''அத்தையையெல்லாம் மதிப்பிலே தான் வச்சிருக்கியா?''

# காணிக்கை

ஆர்வி



''ஏன்?''

''ஏனு? மணி என்ன ஆச்சு இப்போ? இத்தனே நேரம் வெளியிலே என்ன வேலே உனக்கு? யாரோட பேசிண்டிருந்தே அப்படி?''

இதைக் கேட்டதும் யாமினி மலேத் துப் போய் நின்முள். அத்தை இப் படிக் கேட்பாள் என்று அவள் எதிர் பார்க்கவில்லே.

''ஏன், பதில் சொல்லேன்!''

''எழுந்து உள்ளே வா, எல்லாம் சொல்றேன்!'' என்று சட்டென்று சொல்லி விட்டு உள்ளே போனுள் யாமினி.

இப்படிச் சொன்னதும் அத்தைக்குக் கவலே இன்னும் அதிகமாகி விட்டது. உள்ளே வரச் சொல்றுளே, கல்லேத் தூக்கித் தலேயிலே போடுகிற மாதிரி

எதையானும் சொல்லப் போகிருளோ என்று கலங்கியவாறு எழுந்து உள்ளே வந்தாள். யாமினி ஊஞ்சலில் உட்கார்ந்திருந்தாள். ஊஞ்சல் 'கிறீச் கிறீச்' என்று ஆடியது. அதிலிருந்து துள்ளி எழுந்து வந்து அத்தையின் கையைப் பிடித்து அழைத்துப் போய்ப் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டாள். அத்தையின் நெஞ்சம் ஊஞ்சலைப் போல் ஆடியது.

''நான் பேசிண்டிருந்தது உனக்கு எப்படித் தெரியும்? யார் வந்து உனக்குச் சொன்னது ?''

அத்தையின் பார்வையில் பயம் படர்ந்து வந்தது.

'' நானே உங்கிட்டே சொல்லணும்னுதான் நினேச்சேன். அதுக்குள்ளே நீயே கேட்டுட்டே !''

'' உன்னைப் பத்தி என்னென்னவோ பேசிக்கிறதெல்லாம் நிஜந்தானு?..... நிஜந்தானு....?'' அத்தையின் குரல் நடுங்கியது.

''ஊரிலே பேசிக்கிறதெல்லாம் எனக்குத் தெரியாது. அதைப் பற்றி நான் கவலைப்படவுமில்லே. நீயும் கவலைப்பட வேண்டாம். ஏன்னு உனக்குத் தெரியாமெ எதுவும் நடந்துடாது. அது மட்டுமில்லே, அத்தை. உனக்குப் பிடிக்காத காரியத்தை நான் செய்யவும் மாட்டேன்......''

யாமினி இதைச் சொல்லி முடிப்பதற்குள் அத்தை உணர்ச்சி மிகுதியால் அவளைக் கட்டிக் கொண்டு உச்சி மோந்தாள். கண்களிலிருந்து கண்ணீர் பொல பொலவென்று சொரிந்தது.

''ஆனல் நான் பேசிண்டிருந்தது உண்மைதான். இன்னிக்கு மட்டும் என்ன, ஒரு வாரமாவே பேசிண்டுதான் இருக்கேன். யார் தெரியுமா அவர் ? நம்ம ஹெட்மாஸ்டரோட தம்பி. முந்தியேகூட அமெரிக்காவுக்குப் போகப் போறர்னு உங்கிட்டே சொல்லியிருக்கேன். உனக்கு நினைவு இருக்காது. நான் போன லீவிலே இங்கே வராமெ கன்னியாகுமரிக்கு எக்ஸ்கர்ஷன் போய் இருந்தேன் பாரு — முழுக்கவும் பொறுமையாக் கேளு — அப்பத் தற்செயலாய் அவரைப் பார்த்தேன். ஹெட்மாஸ்டர் தம்பியாச்சேன்னு பேசவும் பேசினேன். அவரும் பேசினர். எனக்கு அப்பவே ஒரு மாதிரியா இருந்தது. உங்கிட்டே சொல்றதுக்கு என்ன வெட்கம்? பார்க்கவும் நன்னயிருந்தார்; நிறையவும் படிச்சிருந்தார். அதனலே எனக்கு அவரைப் பிடிச்சுப் போச்சு. இருந்தாலும் முன்னே பின்னே தெரியாதவரோட, குணம் நடத்தையெல்லாம் தெரிஞ்சுக்காமே அதிகம் பேச்சு வைச்சுக்க எனக்குப் பயம். அப்புறம் தான் தெரிஞ்சுது, அவருக்கும் என்னே ரொம்பப் பிடிச்சிருக்கு. அமெரிக்கா போயிட்டு வந்திருக்கார்; இப்ப ஆயிரம் ஆயிரமாச் சம்பாதிக்கிருர்; எத்தனையோ பெரிய இடத்திலே யிருந்தெல்லாம் பெண் கொடுக்க வர்றவாளையெல்லாம் வேண்டாங்கிருர் — எல்லாம் எனக்குத் தெரியும். ஆனலும் நாங்களா எப்படி முடிவு செய்ய முடியுமாம் ? கல்யாணம்னு சொன்னல் நானு யாரையும் கேக்காமெ தலையை ஆட்டிப்பிட முடியாதுன்னு அவருக்குத் தெரியும். அவரும் அப்படித்தான். அண்ணு, அம்மா சம்மதத்தைக் கேக்கணும். இதையெல்லாம் யோசனை பண்ணிண்டுதான் அவர், 'நானும் ஊருக்கு வர்றேன். நீயும் அங்கேயே இரு. பெரியவர்களைக் கேட்டு, அவர்களைச் சம்மதிக்க வைப்போம்'னு மெட்ராஸிலேயிருந்து எனக்கு எழுதியிருந்தார். 'சரி, வாங்கோ. என் அத்தைகிட்டே நான் பேசிக்கிறேன். எங்க அத்தை சரின்னு சொல்லிட்டா அப்பாவைப் பத்திக் கவலையில்லே'ன்னு நானும் எழுதியிருந்தேன். அதுக்கு மேலேதான் அவர் காரை எடுத்துண்டு வந்திருக்கார். வந்து ஒரு வாரம் ஆச்சு. நான்தான் போயிண்டிருக்கே தவிர — எங்களுக்கு எப்படி இந்தப் பேச்சை எடுக்கிறதுன்னே தெரியல்லே. இன்னிக்கு எப்படியாவது உங்கிட்டே பேசிப்பிடறேன்னு சொல்லிட்டு நான் வந்திருக்கேன். அவரும் அப்படியே அண்ணுகிட்டே பேசிப்பிடறதாச் சொல்லிட்டுப் போயிருக்கார். உன்னலே என் வேலே சுலபமா முடிஞ்சு போச்சு. அவர் தான், பாவம், என்ன செய்கிருரோ, அங்கே? அண்ணுகிட்டே பேசறதுக்கு அத்தனை கூச்சம் !''

அத்தை கடைசி வரையில் எல்லாவற்றையும் பொறுமையாகக் கேட்டுக் கொண்டிருந்துவிட்டு, பிறகு என்னவோ ஒரு முடிவுக்கு வந்தவளைப் போல, ''சரி; குத்து விளக்கை ஏற்றி வச்சு, தம்புராவை எடுத்து வச்சிண்டு உங்க அம்மா படத்துக்கு முன்னடி உட்கார்ந்து ரெண்டு பாட்டுப் பாடு. மத்ததை யெல்லாம் அப்புறம் பேசிக்கலாம்'' என்று எழுந்து போனள்.

குத்துவிளக்கு முத்துப் போல் எரிந்து ஒளி வீசியது. ஊதுவத்தியின் மணம் கூடம் முழுவதும் பரவியிருந்தது. அத்தை யாமினியின் பாட்டிலே தோய்ந்து போய் உட்கார்ந்திருந்தாள். பாட்டு முடிந்தது.

''பாப்பா, நீ சொல்லறே சரி. அவாளெல்லாம் ஒரு ஜாதி; நாமெல்லாம்

வேறே ஜாதியாச்சே. அந்தப் பேச்சு உங்களுக்குள்ளே வரல்லியா ?''

''வந்தது அத்தே. அவர் என்ன தெரியுமா சொல்றார் ? அவர் ஆண் ஜாதியாம்; நான் பெண் ஜாதியாம். வேறே ஏது ஜாதின்னு கேக்கறார் அவர். அப்படி ஜாதி பார்க்கணும்னு பழசையெல்லாம் கணக்கிலே எடுத்துக்காமெ, மறுபடியும் புதிசாத்தான் ஜாதி பிரிக்கணுமாம் !''

''அது என்னவோ நியாயமாத்தான் எனக்கும் படறது!'' என்றாள் அத்தை.

## அத்தியாயம் 28

யாமினியின் அத்தை நினைத்ததைப் போல இந்த ஜாதிப் பேச்சு அங்கும் அடிபட்டது. முதலில் பாஸ்கரனுடைய மன்னியே தயங்கினாள். புதிதாக ஒன்றை ஏற்றுக்கொள்கிற துணிச்சல் அவளுக்கு வரவில்லை. ஆனால் பாஸ்கரனுடைய அன்புக்குக் குறுக்கே நிற்கவும் அவளுக்கு மனசு வரவில்லை. இன்னொரு பக்கம் யாமினியும் வந்து வந்து பழகியவள். கண்ணுக்கு அழகாயிருந்ததைப் போல் குணத்திலும் பண்பான பாங்கிலும் அழகும் அடக்கமும் கொண்டவள். மற்றதெல்லாம் எப்படியோ அவளுக்குத் தெரியாது. பாஸ்கரனுக்கு இந்த யாமினி பலவிதங்களிலும் பொருத்தமானவள் என்பது மட்டும் அவளுக்குத் தெரியும். உருவத்திலும் குணத்திலும் அவர்கள் ஒருவருக்காகவே ஒருவர் படைக்கப்பட்டவர்கள் போல் இருந்தார்கள். இரண்டு பேரும் சேர்ந்து நிற்பதையோ, சேர்ந்து வருவதையோ பார்த்தால் கண் திருஷ்டி பட்டுவிடும் போல் அத்தனை லட்சணமாய், எடுப்பாய், பாந்தமாய் இருந்தார்கள். இப்படிப்பட்டவர்கள் உள்ளத்தாலும் இணைந்திருப்பதைப் பிரிப்பது மகா பாவம் என்று அவளுக்குப் பட்டது. ஜாதியோ, அந்தஸ்தோ — எதைச் சொல்லி இவர்களைச் சேரவொட்டாமல் தடுக்க நினைத்தாலும் அது பெரிய கொடுமை என்று தோன்றிற்று அவளுக்கு.

''ஏண்டி பாப்பா, நீ எங்க ஜாதியிலே வந்து பிறந்திருக்கப்படாதாடி?'' என்று மன்னி, இந்த விஷயம் எல்லாம் தெரியாத நாட்களிலேயே யாமினியைப் பார்த்துக் கேட்டிருக்கிறாள்.

''ஏன், அதனாலே என்ன இடைஞ்சல் இருக்கு ? இந்தக் காலத்திலேதான் இதையெல்லாம் யாரும் பார்க்கிறதில்லையே. முந்தி மாதிரி ஜாதிக்கு ஜாதி வித்தியாசம் யார் இப்போ பார்க்கிறா? நடைமுறையிலே அதெல்லாம் எங்கே இருக்கு?'' என்று யாமினியும் திருப்பிக் கேட்டிருக்கிறாள்.

''இல்லாத மாதிரிதான் இருக்கு. ஆனால் எப்போதும் அப்படி இருந்துடறதில்லே. சமயத்துக்கு இந்த ஜாதிப் பேச்சு எங்கேயிருந்தோ வந்து முளைச்சிடறது. அதனாலேதான் சொல்ல வர்றேன்.''

அன்று தான் பொதுவாகச் சொன்ன பேச்சு இன்று தங்கள் வீட்டிலேயே வந்து முளைத்து விட்டதைக் கண்டு மன்னி திகைத்துப் போனாள். யாமினி எந்த ஜாதியைச் சேர்ந்தவளாக இருந்தாலும் மன்னி வரையில் அவளை ஏற்றுக் கொள்ளத் தயார்தான். அவளைப் போல் ஒரு பெண் எந்தக் குடும்பத்துக்கு வந்தாலும் சிறப்பாகத்தான் இருக்கும் என்பதில் மன்னிக்குச் சந்தேகமேயில்லை. ஆனால் இதனால் குடும்பத்திலே அண்ணாவுக்கும் தம்பிக்கும் அம்மாவுக்கும் பிள்ளைக்கும் மனக் கசப்பு வந்துவிடப் போகிறதே என்று தான் அவளுக்குப் பயமாகவும், தயக்கமாவும் இருந்தது.

கடைசியில் அன்றில் பறவைகள் போலிருந்த இந்த ஜோடி மீது உண்டான பரிவு தான் வென்றது. அவள் எப்படியோ இந்த விஷயத்தைப் பக்குவமாக அண்ணாவிடம் சொல்லி, அவருடைய சம்மதத்தைப் பெற்று விட்டாள். அவரும் அம்மாவுக்காகத்தான் தயங்கினாரே தவிர, மனப்பூர்வமாக இதற்கு மறுப்பே சொல்லவில்லை.

''படிக்கிற போது அவனுக்குப் பிடித்த சப்ஜெக்டை அவனையேதான் எடுத்துப் படிக்கச் சொன்னேன். என் வற்புறுத்தலுக்காகப் படிக்கச் சொல்லியிருந்தால் அவனால் இவ்வளவு தூரம் வந்திருக்க முடியுமா? அதே போலத்தான் இதுவும். இது இன்னும் ஒரு படி அதிகம்கூட. அவன் மனசுக்குப் பிடித்த பெண்தான் முக்கியமே தவிர, மத்ததெல்லாம் முக்கியமல்ல. நம் வற்புறுத்தலுக்காக அவன் ஆயுசு முழுவதும் கஷ்டப்பட முடியுமா? எந்த ஜாதிதான் இன்னிக்குச் சரியாக இருக்கு. இதனாலே குடிமுழுகிப் போச்சுன்னு சொல்றதுக்கு? அதனாலே அவனுக்கு அவளைப் பிடிச்சிருந்தால் எனக்கும் சம்மதம் தான்னு சொல்லிடு. எனக்கு அந்தப் பெண்ணை நன்னாத் தெரியும். அவள் வரையில் ரொம்ப உசந்த பெண். சந்தேகமில்லே.''

ஊரிலிருந்து இதற்காகவே வரவழைத்திருந்த பார்வதியம்மாளுக்குத்தான் இது பெருத்த இடி போல இருந்தது.

''ஏன்டா, பட்டாபி, அவன்தான் தெரியாமெ போய்க் கிணத்துலே விழறேன்னு சொன்னல், நீயும் சம்மதம் தான்னு சொல்லிட்டியாமே. அது என்னமாச் சொன்னே நீ? எடமாவது நல்ல எடமா, குலமாவது ஒரே குலமா— எதிலே சிறந்தவன்னு நீ தலையை ஆட்டினே? அவனுக்கு எத்தனை பெரிய இடமெல்லாம் வர்றதுக்கு இருக்கு! எவ்வளவெல்லாம் செய்யறதுக்குக் காத்துக்கிண்டு இருக்கா—யாரோ சினிமாக்காரி மாதிரி இருக்காளாம் — ரெண்டுபேரும் ஆசைப்பட்றாளாம்னு நீ சம்மதிச்சுட றதா? இதுக்குத்தான் இத்தனையெல்லாம் பாடுபட்டதா? வயித்திலே நெருப்பைக் கட்டிக்கிண்டு, வேண்டாத தெய்வங்களையெல்லாம் வேண்டிக்கிண்டு அமெரிக்காவுக்கு அனுப்பிச்சுதா?..... யோசனை பண்ணிப் பாரு. இந்த மாதிரி ஒருத்தன் கிடைச்சானேன்னு, எவளும் ஆசைப்படத்தான் படுவாள். இல்லாட்டா கசக்குமோ ஒரு பெண்ணுக்கு? இவன் என்னத்தைக் கண்டான்? சிரிச்சுப் பசப்பியிருந்தால் இவனும் மகிழ்ந்து போயிருப்பான். அப்ப எதையாவது கேட்டிருந்தால் சரின்னு சொல்லியிருப்பான். அதைப் போய் ஆசைப்பட்றதுன்னு சொல்றதா ?.... அந்தப் பொண்ணு அஜிதாவும்தான் ஆசைப்பட்டுது. இவன் அப்ப ஒரு நிலையான்னு நின்னன்? தானு வந்த லக்ஷ்மியை வேண்டாம்னு சொல்லிட்டு என்னவோ சொல்லுவாளே, அந்த மாதிரி கதையான்னு இருக்கு — இப்ப எங்கேயோ போய் விழறேன்னு சொல்றது!'' என்றெல்லாம் ஒரு நாள் முழுவதும் பெரிய பிள்ளையோடும் நாட்டுப் பெண்ணேடும் கட்சியாடினள். பாஸ்கரனிடமேகூட வந்து மிரட்டிப் பார்த்தாள். ஒன்றும் பலிக்கவில்லை. அவளைத் தவிர வேறு யாரும் அவள் கட்சியை ஆதரிக்கவில்லை.

''அம்மா! இதோ பாரு. இந்தக் கல்யாணம் வேண்டாம்னு சொன்னு, வேறே எந்தக் கல்யாணமும் எனக்கு வேண்டாம். அதுக்குச் சம்மதமானுச் சொல்லு, நான் கல்யாணம் பண்ணிக்காமல் இருந்துடறேன்!'' என்று கடைசியாக ஒரு 'பாண'த்தை விட்டான் பாஸ்கரன்.

''அது மட்டுமில்லே அம்மா. இப்ப இவன் கல்யாணம் பண்ணிக்கலேன்னு அந்தப் பெண்ணுக்கு வேறே எங்கேயும் மாப்பிள்ளை கிடைக்க மாட்டான். அவ்வளவு தூரத்துக்கு ஊரிலே பேச்சு வளர்ந்திருக்கு இவனுலே. வீணு ஒரு பெண் பாவம் வந்து சேரும்!'' என்றார் பட்டாபி.

''அதுகூடத் தேவலையே. இவ்வளவு தூரம் பேசிப் பழகினதுக்கு அப்புறம் கல்யாணம் பண்ணிக்க முடியாதுன்னு சொன்னல், வம்புப் பேச்சுப் பேசினவங்கள்ளாம்கூட ஒண்ணுச் சேர்ந்துண்டு சண்டைக்கு வந்துவிடுவார்கள், 'முதல்லேயே எங்கே போச்சு புத்தி?'ன்னு. பெரிய வம்பாப் போயிடும். அப்புறம் உங்க பெரிய பிள்ளை இந்த ஊரிலே உத்தியோகமே பார்க்க முடியாது. அதனுலே உங்களுக்கு ஏன் அம்மா இந்தப் பொல்லாப்பு, பேசாமெ நடக்கட்டும்னு சொல்லிடுங்கோ. உங்களுக்கு இஷ்டம் இருந்தால் அந்தப் பிள்ளைகிட்டே போய் இருங்கோ. இல்லேன்னு இங்கேயே இருந்துடுங்கோ. அமெரிக்காவிலே ஒரு பெண் கிடைச்சாள்னு அழைச்சிண்டு வந்திருந்தால்—நம்மாலே என்ன செய்திருக்க முடியும்? நல்ல வேளையா அப்படியெல்லாம் நேராமெ அடக்கமான பெண்ணு மனசுக்குப் பிடிச்சவளாக் கிடைச்சாளேன்னு எண்ணிண்டு சந்தோஷப்படுங்கோ!'' என்று மன்னி தன் மாமியாரைத் தனியே அழைத்துக் கொண்டு போய்ச் சொன்னுள்.

எல்லாம் சேர்ந்து பார்வதியம்மாளின் வாயை அடக்கிவிட்டது.

எங்கேயோ இருந்த யாமினியை அதற்குள் போய் அழைத்து வந்து பார்வதி அம்மாளுக்கு நமஸ்காரம் செய்யச் சொன்னுள் மன்னி. அவளை ஏற இறங்க நன்றுகப் பார்த்த பார்வதியம்மாள் பெருமூச்சு விட்டாள்.

'' நீ நன்னுத் தீர்க்கசுமங்கலியா இன்னியைப் போல என்னிக்கும் லட்சணமா, பிள்ளை குட்டியைப் பெத்துக்கிண்டு, பூவும் மணமுமா, பொன்னும் மணியுமா இருக்கணும்டியம்மா. மனப்பூர்வமா ஆசீர்வாதம் பண்ணறேன். எம் பிள்ளைக்கு உன்னைத்தான் ரொம்பப் பிடிச்சிருக்காம். வெட்கமில்லாமே சொல்லிக்கிறுன். பிடிச்சிருந்தாலும், அதை அப்படியே வெளியிலே சொல்லிக்கலாமோ! என்னமோ சொல்றுன். போகட்டும். உனக்கும் அவனைப் புடிச்சிருக்கோ, இல்லியோ ?'' என்று கேட்டாள் பார்வதியம்மாள்.

''ஊகும்; அதை நான் வெளியிலே சொல்லிக்கமாட்டேன்!'' என்று வாய்க்குள் முணுமுணுத்துக் கொண்டாள் யாமினி. அப்போது அவளுடைய அழகிய உதடுகள் நாணத்தோடு குவிந்து கொண்டன.

**(தொடரும்)**

## 58

சத்தியமே தெய்வம், சத்தியமே ஆண்டவன் பெயரும் என்று நான் வெகு நாட்களுக்கு முந்தி கண்டேன். என்னுடைய அறிவு, என்னுடைய உணர்ச்சி இரண்டுமே என்னை அந்த முடிவுக்குக் கொண்டுபோய்விட்டன. அந்த சத்தியத்தைத்தான் நான் 'ராமன்' என்று பெயர் சொல்லி இறைஞ்சுகிறேன். பெரிய இடுக்கண் வந்தபோதெல்லாம் அந்தப் பெயரே என்னைக் காப்பாற்றி வந்திருக்கிறது. இப்பொழுதும் அந்த நாமமே என்னுடைய காப்பு.

இதற்குக் காரணம் என்னுடைய குழந்தைப் பருவத்துப் பழக்கமாக இருக்கலாம். இல்லை, துளசிதாஸருடைய மாயமாகவும் இருக்கலாம். எப்படியாயினும் ராம நாமமே என்னுடைய நிரந்தரத் துணை.

குழந்தைப் பருவத்திய நினைவுகள் வருகின்றன. எங்கள் ஊரில், எங்கள் வீட்டுக்குப் பக்கத்தில் இருந்த ராமர் கோயிலுக்குத் தினமும் போய் வருவேன். என்னுடைய ராமன் அப்போது அங்கேதான் வசித்து வந்தான். என்னுடைய பயத்தையெல்லாம் அவன் போக்கி வந்தான். என்னைப் பாபச் செயல்களில் இறங்காமல் தடுத்தான். மூடநம்பிக்கையல்ல, உண்மை. அந்தக் கோயிலில் பூஜை செய்த அர்ச்சகர் கெட்டவனாக இருந்திருக்கலாம். அது எனக்குத் தெரியாது. கோயிலில் அக்கிரமங்களும் நடந்து வந்திருக்கலாம். அதுவும் எனக்குத் தெரியாது. அவை என்னைத் தீண்டவில்லை. இதுவே ஹிந்து சமுதாயத்தில் உள்ள கோடிக்கணக்கான மக்களின் உண்மையான நிலைமையும். என்னைப் போலவே அவர்களும் கோயிலில் நடக்கும் குற்றங் குறைகளால் தீண்டப்படாமல் நன்மையே அடைந்து வருகிறார்கள். (ஹரிஜன், 18-3-33)

'ஹிந்துக்களுக்குத்தான் ராமனும் ராம நாமமும், முஸல்மான்களுக்கு அதில் ஏது இடம்?' என்று யாரேனும் ஆட்சேபிக்கும்போது எனக்குச் சிரிப்பு வருகிறது. முஸல்மான்களுக்கு வேறு ஆண்டவன், நமக்கு வேறு ஆண்டவனா? முஸல்மான்களுக்கும் ஹிந்துக்களுக்கும் கிறிஸ்தவர்களுக்கும் பாரஸியர்களுக்கும் அனைவருக்குமே ஒரே ஒரு ஆண்டவன். எங்கும் நிறைந்து சர்வ வல்லமையும் கொண்டுள்ள ஒரே ஈசனுக்குப் பல நாமங்களிட்டு இறைஞ்சி வருகிறோம்.

காலத்துக்கு அப்பால்; பிறப்பு அற்று, ஒரே பொருளாக, எப்போதும் நிற்கும் கடவுளைத்தான் நான் ராமன் என்று அழைத்து வழிபடுகிறேன். அவனுடைய அருளைத்தான் நான் நாடி வருகிறேன். நீங்களும் அதைத்தான் நாட வேண்டும். ஆனபடியால் முஸல்மான்களாவது வேறு யாராவது என்னுடன் சேர்ந்து ராமனை வழிபடுவதில் குற்றம் இல்லை. நான் 'ராம' என்று சொல்லும் போது, என்னுடைய முஸல்மான் சகோதரன் 'அல்லா' என்றும், 'குதா' என்றும் மனத்துக்குள் சொல்லித் தியானிக்கலாம். அதனால் என் பூஜையோ, பஜனையோ கெட்டுப் போகாது. (ஹரிஜன், 28-4-46)

நான் துளஸிதாஸ பக்தன். சிறு வயதிலிருந்து நான் ஆண்டவனை ராமன் என்றுதான் பூஜித்து வருகிறேன். இது பழக்கத்தினால் வந்ததேயொழிய வேறல்ல. உலகத்தில் வெவ்வேறு நாடுகளிலும், வெவ்வேறு மொழிகளிலும் கடவுளுக்கு மக்கள் இட்டு வந்திருக்கும் பெயர்களில் எதைச் சொன்னாலும் அல்லது ஓம்காரம் முதற்கொண்டு எல்லாப் பெயர்களையும் சொல்லி இறைஞ்சினாலும் முடிவு ஒன்றே. அந்தப் பெயர்களுக்கெல்லாம் பொருளானவன் ஒருவனே. தருமமும் ஒன்றே. தர்மத்தைக் கடைப்பிடித்தலே சிறந்த வழிபாடு. தருமத்தோடு கலந்து ஒன்றிவிட்ட மனிதனுடைய வழிபாடு ஒரு பெயருமிட்டு அழைக்காமலே முடிவடைந்து விடுகிறது. அத்தகையோனுக்குச் சுவாசிப்பது எப்படி இயற்கையோ அப்படி கடவுள் தியானமும் இயற்கையாகி விடுகிறது. மார்பில் பிராண வாயு நிறைந்து உயிரைத் தாங்குவது போல் தியானமும் அவனுக்கு இயற்கையாகிவிடுகிறது. அவனுக்கு வேறு எந்த பூஜை சாதனமும் வேண்டியதில்லை. (ஹரிஜன், 24-3-46)

# பொன்விழா ஆண்டு
# சொல்லி மாளாத் தொண்டு

இந்தப் பூமியினுடைய தன்மையையும் அதிலுள்ள கண்டங்களையும் சமுத்திரங்களையும் அவற்றிலுள்ள தேசங்களையும் தீவுகளையும் அவைகளிலுள்ள ஆளுகை ராஜா முதலானவைகளையும், அந்தத் தேசத்தாருடைய சரித்திரங்களையும் காட்டியது.

இது என்ன என்று மலைக்கிறீர்களா? வேறு ஒன்றுமில்லை. 138 ஆண்டுகளுக்கு முன்பு தமிழ் நாட்டிலே தமிழில் வெளியான பூமி சாஸ்திரம் (சரித்திரம்) என்ற ஒரு நூலின் முதல் பக்கத்தில் காணப்படும் வாசகம் இது. அதாவது அந்தப் புத்தகம் எதைப் பற்றியது என்பதன் குறிப்பு. அது சரி. இந்தப் புத்தகத்தை யார் எழுதியது, எங்கு அச்சிட்டார்கள் என்று தெரிய வேண்டாமா? அதுவும் அதன் கீழே தரப்பட்டிருக்கிறது. இப்படி:

தமிழருக்கு அறிவுண்டாகும்படி பாளையங்கோட்டையிலுள்ள இரேனியுசையாராலே செய்யப்பட்டது. சென்னைப் பட்டணத்திலே சார்ச்சுமிஷோன் அச்சுக்கூடத்தில் பதிப்பித்தது. (1832ம் ஆண்டு.)

வியப்பாக இருக்கிறதா? இதைக் கண்டே இப்படி வியந்தால் இன்னும் சாதாரண இதிகாசம் என்ற நூல் (1858) கணக்குப் பதிவு நூல் (Accountancy) சாஸ்திரச் சுருக்கம் (1874) (Midwifery) போன்ற அருமையான நூல்களையும் ஆண்பாற் புலவர், பெண்பாற் புலவர்கள் வாழ்க்கை வரலாறு பற்றிய தமிழ் 'புளூ டார்ச்' என்ற புத்தகத்தையும் பார்த்தால் எப்படி ஆவீர்களோ எனக்குத் தெரியாது. உடற்கூறு நூல், அறுவை நூல் போன்று இன்னும் எத்தனை எத்தனையோ அரிய தமிழ் நூல்களை அங்கு வைத்திருந்தார்கள். அவையெல்லாம் தமிழக அரசின், தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் தற்கால வெளியீடுகள் என்று எண்ணி விடாதீர்கள். எல்லாம் 120 ஆண்டுகளுக்கு முன்பே பல்வேறு சாத்திரங்களைப் பற்றிய தனியார் வெளியிட்ட தமிழ்ப் புத்தகங்கள். இன்னும் பாருங்கள். திருக்குறளில் எத்தனை தமிழ் வெளியீடுகள் உண்டோ அத்தனையும்; திருக்குறள் எந்தெந்த உலக மொழிகளிலெல்லாம் மொழிபெயர்க்கப் பட்டிருக்கிறதோ, அந்த மொழிப் புத்தகங்களெல்லாம், வள்ளுவரையும் குறளையும் பற்றி இதுவரை யார் யார் என்ன என்ன ஆராய்ச்சிகள், விளக்கங்கள், கதைகள், கட்டுரைகள் எழுதியிருக்கிறார்



கழக நூலாசிரியர் எழுவர்க்கு கவர்னர் பரிசளித்தார்.

களோ அத்தனை புத்தகங்களையும் அங்கு அந்தக் காட்சியில் வைத்திருந்தார்கள். திருத்தொண்டர் புராணமாகிய பெரிய புராணப் பதிப்புக்கள்தாம் எத்தனை எத்தனை! தமிழுக்கு அருந்தொண்டாற்றிய அறிஞர் பெருமக்களின் கிடைத்தற்கரிய உருவப் படங்கள் முந்நூறுக்கு மேலே. பல புலவர் பெருமகனார் பல்லாண்டுகளுக்கு முன் அவர்கள் கைப்பட எழுதிய கடிதங்களின் தொகுப்பு என்று இப்படி அந்தப் பொருட்காட்சி முழுதுமே எல்லாரது கருத்தையும் கவனத்தையும் கவரும்படியாக அமைக்கப் பட்டிருந்தது. என்ன பொருட்காட்சி என்று கேட்கத் தோன்றுகிறது இல்லையா? தமிழின் புகழ் பரப்பும் இத்தகைய கண்காட்சியை யார் அமைத்திருக்க முடியும்? வேறு யார்? திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் தான். அந்த ஸ்தாபனத்தைத் தவிர வேறு யாரால் இத்தகைய அரிய செயலைச் சாதிக்க முடியும்?

இன்று தனக்குப் பொன் விழாக் கொண்டாடிக் கொண்டிருக்கிறது இந்த ஸ்தாபனம். அந்த வைபவத்தையொட்டித்தான் ஒரு நூற் காட்சியை, விழா நடந்த இராஜேசுவரி கலியாண மண்டபத்தின் பின்பக்கமுள்ள விருந்துக் கூடத்தில் நிறுவியிருந்தார்கள். பொருத்தமான இடம்தான். அறிவுப் பசிக்கு விருந்தாக அங்கே அந்தக் காட்சி இருந்தது.

ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னே இப்படித்தான் ஒருவருக்கு அறிவுப் பசி ஏற்பட்டது. மனிதனுக்கு மூவாசைகள் என்றுதான் கூறுவார்கள். — மண், பொன், பெண் என்று. இதையெல்லாம் விட்டு விட்டு நான்காவதாக ஒரு குற்றமற்ற ஆசையைப் பற்றிக்கொண்டார் அந்த மனிதர். அதுதான் நூல் ஆசை. இந்தப் புத்தகப் பித்தர் தம் வாழ்க்கையைத் தொடங்கியது இலங்கையின் தலைநகரான கொழும்புவில். எப்படி? ஒரு வியாபார நிலையத்தில் எளிய எழுத்தராக. அவருக்கு இப்படியொரு பித்தூட்டிய பெருமை மறைமலையடிகளாரைத்தான் சேரும். எழுத்தரான அந்தப் புத்தகப் பித்தர்தான் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தை 1920ம் ஆண்டு நிறுவிய திரு வ. திருவரங்கம் பிள்ளை அவர்கள். புத்தகப் படிப்பில் அவருக்கு இருந்த அளவற்ற ஆசை காரணமாக உருவானது அந்தப் பதிப்பகம். ஒரு புத்தக வெளியீட்டகம் ஐம்பது ஆண்டு காலம் வாழ்ந்து பணியாற்றுவதென்பது சாதாரணமான விஷயமா என்ன? அதுவும் இலக்கியப் புத்தகங்களையே வெளியிட்டு! அந்தச் சாதனையைச் செய்து காட்டியிருக்கிறது சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம். இதுவரை 1400க்கும் அதிகமான தரமான நூல்களை வெளியிட்டுத் தன் பணியை மணக்கச் செய்திருக்கிறது. இதற்குக் கழகத்தை நிறுவிய திருவரங்கம் பிள்ளையவர்களின் தம்பியாகிய திரு வ. சுப்பையா பிள்ளையவர்களின் தளரா உழைப்புத்தான் காரணம். தமையனார் கண்ட கனவை நினைவாக்கி நிறைவேற்றி வருகிறார் திரு சுப்பையா பிள்ளை. தமிழ் மொழி, தமிழ் இலக்கியம் இவற்றில் அவர் ஆற்றிவரும் தொண்டுக்காக மத்திய அரசு பத்மஸ்ரீ பட்டம் கொடுத்துச் சிறப்பித்திருக்கிறது.

சுப்பையா பிள்ளை என்றாலே செட்டும் சிக்கனமும் கூடவே நினைவுக்கு வர வேண்டும். நல்லதுதான். இல்லாவிட்டால் இந்த ஸ்தாபனத்தை ஐம்பது ஆண்டுகளாக வளர்த்திருக்க முடியுமா? அல்லது வைர விழாவும் முத்து விழாவும் எடுக்கும் தகுதியை அதற்குத் தேடிக் கொடுத்திருக்கத்தான் முடியுமா?



பொன்விழா மலரைத் தமிழக உயர்நீதி மன்ற நீதிபதி பு. ரா. கோகுலகிருஷ்ணன் வெளியிட்டார்.

கடந்த ஆண்டு டிசம்பர் திங்கள் 18, 19, 20 ஆகிய மூன்று நாட்களும் ராஜேசுவரி கலியாண மண்டபத்தில் கழகத்தின் பொன் விழா கோலாகலமாக நடந்தது. தொழிலதிபர் திரு நா. மகாலிங்கம் வரவேற்புரை நிகழ்த்தினார். தமிழக ஆளுநர் மாண்பமை சர்தார் உஜ்ஜல் சிங் தொடக்கவுரை ஆற்றினார். விழாவின் தொடக்க நாளுக்குத் தலைமை தாங்கி நூற் காட்சியைத் திறந்து வைத்துச் சொற்பெருக்காற்றினார் தமிழகக் கல்வி அமைச்சர் மாண்புமிகு நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள். தொடர்ந்து நடந்த விழா நாட்களில் அறிஞர் பெருமக்கள் பலர் தமிழைக் காக்க, வளர்க்கச் சொற்பொழிவாற்றினார்கள். கழக நூலாசிரியர் எழுவர் சால்வை போர்த்திப் பாராட்டப்பட்டனர். பரிசும் கேடயமும் பெற்றனர்.

முறைப்படி இவ்விழா கடந்த ஆண்டு, ஆகஸ்ட் மாத வாக்கில்தான் நடைபெற்றிருக்க வேண்டும். ஆனால் பொன்விழாவுக்காகத் தயாரான சில புத்தகங்கள் முடிவு பெறாததினால் விழாவைத் தள்ளி வைத்தார்கள். இதனால் ஏற்பட்ட ஒரே ஒரு குறை, விழாவில் பேசியவர்கள் எல்லாருக்கும் இந்தச் சமயத்தில் அரசியல் சூடு ஏறி இருந்ததினால் அவர்கள் பேச்சிலும் அந்தச் சூட்டை உணர முடிந்தது. கல்லூரிகளில் பயிற்சி மொழியைத் தமிழாக்க வேண்டும் என்று பலரும் பேசி அரசுக்கு ஆதரவைப் பெருக்க முற்பட்டார்கள். இந்த வேகம் சிலரிடம் அளவுக்கு அதிகமாகக்கூடப் போயிற்று. ஒரு வெளியீட்டகத்தின் தமிழ்ப் பணிக்கான பொன் விழாவில் இப்படியோர் அரசியல் வாடை வீசுவதைத் தவிர்த்திருக்கலாம். விழாவில் பேசிய சிலரின் போக்குச் சற்று வேதனையையும் தந்தது.

தி. தெ. சை. நூ. கழகம் தமிழ் இலக்கியங்களை மட்டும் வெளியிடவில்லை. தமிழ் ஆராய்ச்சி, விஞ்ஞானம், விலங்கியல், விண்வெளி, அறநெறி, சட்டம், சமயம், சித்தாந்தம், சிறுவர் இலக்கியம், அறிவியல் என்று எல்லாத் துறைகளிலும் தமிழில் நூல்களை வெளியிட்டுப் பெருமை பெற்றிருக்கிறது. இதன் பணி இன்னும் பரவலாகப் பல்லாண்டு தொடர வேண்டும் என்று வாழ்த்துக் கூறுகிறோம்.

**— கௌசிகன்**

### பொன் விழாவில் சில பொறுக்கு மணிகள்

○ மேலை நாடுகளில் ஒரு நல்ல புத்தகம் வெளியானால் பத்து லட்சம் இருபது லட்சம் பிரதிகள் விற்பனையாகின்றன. தமிழிலோ அதிலும் கழகம் வெளியிடும் தரமான நல்ல நூல்கள் இரண்டாயிரம் பிரதிகள் கூட விற்பனையாவதில்லை. இந்த நிலை ஏன்? வாங்குபவர்கள் இல்லாததுதான்.... வீட்டுக்கு வீடு புத்தகசாலை அமைக்கும் பண்பாடு மேலை நாட்டினரிடம் அமைந்திருக்கிறது. அந்த நிலை இங்கு வரவேண்டும்.

சோவியத் ருஷ்யாவில் உள்ள சைபீரியா நாட்டின் வடகோடியில் யாகுட்ஸ்க் நாட்டின் ஜனத்தொகை 50,000தான். அங்கு காண்பதற்கு விசேஷமாக ஒன்றுமில்லை, ஒரு நூல் நிலையத்தைத் தவிர. அந்த நூல் நிலையத்திலே உள்ள புத்தகங்கள் எத்தனை தெரியுமா? ஐந்து லட்சத்து ஐம்பதினாயிரம்!

—வரவேற்புரையில் — **திரு நா. மகாலிங்கம்**

○ மூன்றரைக் கோடி மக்கள் வாழும் தமிழகத்தில் இன்று 2000 பிரதிகள் கூட நல்ல புத்தகங்கள் விற்பனையாவதில்லை.

ஒரு வருஷத்தில் ஹிக்கின்பாதம்ஸ் என்ற புத்தக விற்பனை நிறுவனம் ஆங்கிலப் புத்தகங்களைமட்டும் ஒரு கோடி ரூபாய்க்கு விற்பனை செய்கிறது. ஆனால் இருபது தமிழ்ப் பதிப்பாளர்கள் சேர்ந்து ஓர் ஆண்டுக்கு விற்பனை செய்யும் தமிழ்ப் புத்தகங்களின் தொகை 15 லட்சம்கூட இல்லை.

**— தலைமையுரையில் நெடுஞ்செழியன்**

○ கழகத்தின் பொன் விழாவிலே சமய மகாநாட்டுக்குத் தொடக்கவுரையை இலங்கையைச் சேர்ந்த திருவாட்டி ரத்ன நவரத்தினம் அவர்கள் ஆங்கிலத்தில் ஆற்றினார்கள். தமிழ் இலக்கியத்தின் வளர்ச்சி பற்றிப் பெரிய புராணத்தில் உள்ள சில கருத்துக்களை அற்புதமாக வெளியிட்டார்கள். சிங்களத் தமிழில் அவர்கள் ஆரம்பத்தில் பேசிய சில வார்த்தைகள் இனிமையாக இருந்தன.

* * *

○ பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே வாழ்ந்த சேர சோழ பாண்டியர்களின் அரண்மனைகளை இன்று காண முடியவில்லை. ஆனால் அவர்கள் காலத்தில் தோன்றிய இலக்கியங்கள் இன்னும் மறையாமலிருக்கின்றன.

நாம் கண்ணால் காணாத கம்பனோடு, வள்ளுவனோடு, இளங்கோவோடு, பேச முடிகிறது. எப்போது கூப்பிட்டாலும் அவர்கள் நம்மோடு அளவளாவத் தயாராக இருக்கிறார்கள். இலக்கிய உறவுதான் நிலையான உறவு. **— பொன் விழாவில் டாக்டர் மு. வ.**

○ சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், டாக்டர் மு. வ. வின் "திருக்குறள் தெளிவுரை" என்ற மக்கள் பதிப்பை ஆறு லட்சம் பிரதிகள்வரை விற்பனை செய்திருக்கிறது.

## 24. தத்துவத்தில் கீறல்

அன்று காலையில் முரளி சிவராமனின் தாயாரைப் பார்க்கச் சென்றிருந்த போது, சாரதாவும் அங்கு வந்திருந்தாள். கேரளாவில் கட்சி சம்பந்தப்பட்ட பயிற்சி பெற்று ஆறு மாதங்களுக்குமுன் ஊர் வந்து சேர்ந்திருந்தாள், சாரதா. இப்போது கட்சியில் தீவிரமாகப் பணியாற்றி வந்தாள். சாரதாவைக் கண்டதும் சிவராமனின் தாயார் கதறி அழுதாள்.

''என்னைத்தான் மறந்து விட்டான். இவளையுமா மறந்து விட்டான்?'' என்று கூறி அழுதாள். சாரதாவின் சமாதானமோ முரளியின் ஆறுதல் வார்த்தைகளோ அவள் அழுகையை நிறுத்தவில்லை. முரளிக்குச் சிவராமன் மீது கோபம் எழுந்தது.




சாரதாவுக்கே சிவராமனின் தலைமறைவு வியப்பாயிருந்தது. கட்சி சம்பந்தமாக எந்தத் தலைவரும் இப்படித் திடீரென்று தலைமறைவாயிருந்து பணியாற்ற வேண்டிய கட்டம் அடிக்கடி தோன்றும் என்பதைச் சாரதா அறிந்திருந்ததால் அதுபற்றி அவள் கவலை கொள்ளவில்லை. இருந்தாலும், முரளி கேட்ட கேள்வி அவளை நடுங்க வைத்து விட்டது. சிவராமனின் தாயாரிடம் விடைபெற்றுக்கொண்டு வெளியே வந்தபோது முரளி கேட்டான் :

''சிவராமன் உயிரோடாவது இருக்கிறானா....?''

இந்தக் கேள்விக்குச் சாரதாவால் திட்ட வட்டமாகப் பதில் கூற முடியவில்லை. ஒரு கணம் திணறினாள். உடல் வியர்த்தது. கால்கள் நடுங்கின. பிறகு சமாளித்துக் கொண்டாள்.

''ஏன் இப்படிக் கேட்கிறீர்கள்?'' என்று பயத்துடனே கேட்டாள் சாரதா.

''ரஷ்யாவுக்குப் போனவன் தில்லிக்குத் திரும்பியது தெரியும். அதற்குப் பிறகு அவனிடமிருந்து எந்தத் தகவலும் இல்லை. தில்லிக்கு அவன் திரும்பி ஒரு வருஷம் ஆகப் போகிறது. பெற்ற தாயாரைக்கூட மறக்க வைக்கும் அளவுக்கு ஒரு கட்சி அறிவைச் சூறையாடிப் பைத்தியமாக்கி விடுமா...?''

சாரதா பதில் பேசாமல் இருந்தாள். அவளுடைய மனத்திலும் கவலை புகுந்து கொண்டது. முரளி தொடர்ந்து சொன்னான்:

''எல்லையில் சீனாவின் கெடுபிடி இருக்கும் இந்த வேளையில், கட்சித் தலைவர்கள் சிலர் தலைமறைவாக இருப்பதென்றால், சந்தேகப்பட வேண்டிய விஷயந்தான். நாட்டுக்குத் துரோகம் செய்யும் பணியில் ஈடுபடுகிறார்களோ, என்னவோ?''

''சிவராமன் அப்படிச் செய்யமாட்டார்'' என்றாள் சாரதா.

''நிர்ப்பந்தம் ஏற்பட்டால், கட்சியின் கட்டளைக்குப் பணிந்து தானே தீர வேண்டும்?''

''அப்படி ஒரு கட்டம் வரும்பொழுது கட்சியையே எதிர்த்து நிற்கத் தயங்கமாட்டார்'' என்றாள் சாரதா. அவளை வியப்புடன் உற்றுப் பார்த்தான் முரளி.

''அவன் மீது அவ்வளவு நம்பிக்கை உனக்கு இருக்கிறதா?'' அவளைக் கூர்ந்து பார்த்துக் கொண்டே கேட்டான். தலையை அசைத்தாள். அவளைப் பரிதாபமாகப் பார்த்தான் முரளி.

''அப்படியானல் நீ அவனை இழக்கத் தயாராகி விட வேண்டியதுதான்'' என்றான் முரளி.

சாரதா இதைக் கேட்டுத் திடுக்கிட்டாள். முகமெல்லாம் வியர்த்தது. உதடுகள் துடித்தன. அழுகை வந்து விடும் போலிருந்தது. சிரமத்துடன் அடக்கிக் கொண்டாள்.

''கட்சிக்கு எதிராகச் செயல்படக் கட்சி ஒருநாளும் சம்மதிக்காது. கம்யூனிஸ்ட் கட்சிக்குள் தீவிர அங்கத்தினராய்ப் பிரமாணம் எடுத்துப் புகுந்து விட்ட பிறகு, அதன் அந்தரங்கத் திட்டங்களை அறிந்து கொண்ட பிறகு, கட்சியின் பாதையை விட்டு விலகவே முடியாது'' என்றான் முரளி.

சாரதாவின் கண்கள் கலங்கின. முரளிக்குத் தெரியாதவாறு மறைக்க முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டாள்.

சிவராமனின் வீட்டை விட்டுத் திரும்பியதிலிருந்து முரளி மனக் கலக்கத்துடனேயே யிருந்தான். இரவு இரண்டு மணிக்குப் 'பாரதமணி' காரியாலயத்தில் வேலை முடிந்து முரளி வெளியே வந்தபோது, சாமிநாதன் மாடிப் படிகளில் இறங்கிக் கொண்டிருந்தான். முரளி வருவது தெரிந்ததும் மாடிப் படியில் ஒதுங்கி நின்றுகொண்டு முரளி போவதற்கு வழி கொடுத்தான்.

''ஸ்கூட்டர் இங்கேயே இருக்கட்டும். என்னோடு வா. உன்னை உன் வீட்டில் கொண்டு விட்டு விட்டுப் போகிறேன்'' என்றான் முரளி.

ர.சு.நல்லபெருமாள்



# இதோ, ஒரு <u>தீமையற்ற</u> தலைவலி மாத்திரை!



# அவேதன்®

அற்புத 'எபெப்' அடங்கியது.

(என்-அஸிடில்-பி-எமினோஃபினல்)



தலைவலி மாத்திரை ஏதாவது தீங்கு விளைவிக்குமோ என்கிற பயத்தால், நாம் எத்தனையோ தடவை தலைவலியைப் பொறுத்துக் கொண்டு அவதிப்படுகிறோம்.

ஆனால் அப்படி அவதிப்பட வேண்டாம். அவேதன் தீமையில்லாமல் தலைவலியைப் போக்குகிறது. ஏனெனில், அவேதனில் அற்புத 'எபெப்' அடங்கியுள்ளது. அவேதன் சாப்பிட்ட பின எவ்வித துன்பகரமான பின் விளைவுகளும் ஏற்படாது; துரிதமான நிச்சய நிவாரணம் கிடைக்கும்.

எனவே, தீமையற்ற முறையில் தலைவலியைப் போக்குங்கள். ஜலதோஷம், ஃப்ளூ மற்றும் இதர வலிகளையும் நோவுகளையும் கூடத்தான்! 'எபெப்' அடங்கிய அவேதன் சாப்பிடுங்கள்.

**2 டேப்லெட்டுகள்: 15 பைசா.**






அவேதன்— அற்புத 'எபெப்' அடங்கியது. தலைவலி, ஜலதோஷம், மற்றும் ஃப்ளூவிலிருந்து தீமையற்ற நிச்சய நிவாரணம் அளிக்கிறது.

SQUIBB® SARABHAI CHEMICALS

* இ. ஆர். ஸ்க்விப் அண்டு ஸன்ஸ் இன்கார்ப்பரேடெட்டின் ரெஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க்கைக் குறிக்கிறது. காமசந்த் ப்ரேம்சந்த் பிரைவேட் லிமிடெட் இதை உபயோகிக்க உரிமை பெற்றவர்கள்.

HP/AA-57/70 Tam

''இல்லை சார்! நான் ஸ்கூட்டரிலேயே போய் விடுகிறேன்'' என்றான் சாமிநாதன்.

''உன்னோடு பேசவேண்டியிருக்கிறது. வாசலுக்கு வா'' என்றான் முரளி.

இருவரும் கீழே இறங்கிக் காரை நோக்கிச் சென்றனர்.

''உனக்கு இந்தப் பத்திரிகையின் கொள்கையோ தரமோ பிடிக்கவில்லையென்றால், வெளிப்படையாகச் சொல்லிவிடு, சாமிநாதன்'' என்றான் முரளி.

''பிடிக்கிறது. ஆனால், மக்களுக்குத்தான் பிடிக்கவில்லை'' என்றான் சாமிநாதன்.

''மக்களைத் திருத்திவிட முடியும். எனக்கு நம்பிக்கை இருக்கிறது.''

''எந்தப் பத்திரிகையும் இதைச் சாதித்ததாகத் தெரியவில்லையே?''

''ஒரு பத்திரிகையால் மக்களின் தரத்தைத் தாழ்த்த முடிகிறபோது, இன்னொரு பத்திரிகையால் உயர்த்த முடியாதா என்ன?''

''உயிரோடு இருக்கிறவனைப் பிணமாக்க முடிகிறபோது, பிணத்தை உயிர்ப்பிக்க முடியாதா என்று கேட்டால், எப்படி சார்? எனக்கு அதில் நம்பிக்கை இல்லை.''

''எனக்கு நம்பிக்கை இருக்கிறது, சாமிநாதன்!''

''ஆனால் நமக்குப் பத்திரிகையும் விற்பனையாக வேண்டுமே?''

''அதற்குத் திட்டம் போட்டாகிவிட்டது. வெளி நாட்டுப் பத்திரிகைகள் சிலவற்றோடு கூட்டுச் சேர ஏற்பாடு செய்திருக்கிறேன். சிறந்த கட்டுரைகளும், இலக்கிய விமரிசனங்களும் நமக்கு இனி கிடைக்கும். புதுப் புது விஞ்ஞான வளர்ச்சி பற்றிய விஷயங்களும் இனி 'பாரதமணி'யில் இடம் பெறப் போகின்றன. ராஜரத்தினத்தின் முயற்சியால் இத்திட்டம் சீக்கிரம் நிறைவேறும். சாமிநாதன்! இன்னும் ஒரு வருஷத்துக்குள் 'பாரதமணி' பழைய விற்பனையை எட்டிவிடும்'' என்றான் முரளி, உற்சாகத்துடன்.

சாமிநாதன் பேசாமல் நின்றுகொண்டிருந்தான். மத்தியானம் 'காலைக்குரல்' மானேஜர் அவனிடம் பேசியது நினைவில் படர்ந்தது.

''ஒரு ஸ்டெனோ டைப்பிஸ்ட் இருந்தால் சொல். பிரேமா அடுத்த மாதம் வேலையிலிருந்து விலகப் போகிறாளாம்'' என்றான் முரளி.

''ஏன், காரணம் என்னவாம்?'' என்று சாமிநாதன் கேட்டான்.

''வீட்டில் அவள் அப்பாவுக்கு இவள் வேலை செய்வது பிடிக்கவில்லையாம்.''

''இன்னும் மூன்று உதவி ஆசிரியர்களையும் புதிதாகத் தேட வேண்டியிருக்கும்'' என்றான் சாமிநாதன், தணிந்த குரலில்.

''ஏன்....?'' என்று திடுக்கிட்டுக் கேட்டான் முரளி.

'''காலைக் குரலி'ல் அதிகமாக நூறு ரூபாய் சம்பளம் தருகிறார்களாம். பிரேமாவும் அடுத்த மாதம் அங்கேதான் போகப் போகிறாள்.''

''உண்மையாகவா?'' — வியப்புடன் கேட்டான், முரளி.

'''காலைக் குரலி'லிருந்து மானேஜர் இங்கு வந்து இவர்களைக் 'காலைக் குரலு'க்கு வரும்படி கூப்பிட்டிருக்கிறார்.''

''ஓ......! இது, கீழ்த்தரமான செய்கை'' என்றான் முரளி, மிகுந்த கோபத்துடன்.

''சம்பளம் எங்கு அதிகமாகக் கிடைக்கிறதோ அங்கேதான் போவார்கள்'' என்றான் சாமிநாதன்.

கோபத்துடன் சாமிநாதனைத் திரும்பிப் பார்த்தான், முரளி. ''சம்பளந்தான் முக்கியமா?'' என்று கேட்டான்.

''உங்களைப் போல் எல்லோரும் லட்சியவாதியாக இருக்க முடியவில்லையே?'' என்றான் சாமிநாதன்.

முரளியின் நெஞ்சில் சுரீர் என்று தைத்தது. சாமிநாதனை உற்றுப் பார்த்தான்.

''உன்னையும் 'காலைக்குரல்' மானேஜர் பார்க்கவில்லையா?''

''பார்த்தார்.... அறுநூறு ரூபாய் சம்பளம் தருவதாகப் பேரம் பேசினார்.''

''போங்கள்... எல்லோரும் போங்கள்....'' என்றான் முரளி. கோபத்தால் அவனால் தொடர்ந்து பேச இயலவில்லை. தொண்டை அடைத்துக்கொண்டது. காரின் கதவை வேகமாகத் திறந்து உள்ளே அமர்ந்தான்.

''எல்லோரும் போங்கள்... இப்போதே வேண்டுமானாலும் போங்கள். எனக்குக் கவலையில்லை... ஆனால் 'பாரதமணி' நின்றுவிடாது. கையெழுத்துப் பிரதியாகவாவது வெளிவரும்'' என்று கூறிவிட்டுக் கார்க் கதவைப் படீரென்று அடித்துச் சாத்திவிட்டு, கோபத்துடன்

காரைச் செலுத்தினான். கார், உறுமிக் கொண்டு பாய்ந்தது.

* * *

இரவு இரண்டு மணியாகியும் குண்டூரில் வெப்பம் தணியவில்லை. சிவராமன் காற்றுக்காகப் படுக்கையை மொட்டை மாடியில் விரித்துப் படுத்தான். சற்றுத் தள்ளிச் சிதம்மாள் படுத்திருந்தாள். அவளுக்கு இருபத்தைந்து வயதிருக்கும். கறுப்பா யிருந்தாலும் உடற்கட்டுள்ளவள். மல்லாந்து படுத்தவாறு நிலவைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

''உள்ளே போய்ப் படுத்துக்கொள்ளேன்'' என்று சிவராமன் தெலுங்கில் சொன்னான்.

''உள்ளே புழுக்கமாய் இருக்கிறது. இங்கேதான் படுத்திருக்கப் போகிறேன்'' என்றாள் சிதம்மா, பிடிவாதமாக.

சிவராமன் பாயைச் சுருட்டி எடுத்துக்கொண்டு வீட்டுக்குள் சென்று படுத்துக் கொண்டான். சிதம்மா, 'களுக்'கென்று சிரிக்கும் ஒலி கேட்டது. முகத்தைச் சுளித்தவாறு அவளைச் சன்னல் வழியாகப் பார்த்துவிட்டுப் பாயில் படுத்தான் சிவராமன். உள்ளே புழுக்கம் அதிகமா யிருந்ததால் உறக்கம் வரவில்லை. பல நினைவுகள் அலைக்கழித்தன. தனக்குள்ளே சிரித்துக் கொண்டான்.

சிதம்மாவோடு குடும்பம் நடத்தும் வேடிக்கையை எண்ணிக் கோபமும் எரிச்சலும் கொண்டான். இப்படியொரு போலிக்குடும்பம் நடத்த வேண்டியிருக்கும் என்று அவன் கற்பனைகூடச் செய்து பார்க்கவில்லை.

சிதம்மாவுக்குப் பதில் சாரதா, குடும்பம் நடத்த வந்திருந்தால்....

தலைவர் வேதமூர்த்தியிடம் எவ்வளவோ கெஞ்சிப் பார்த்தானே! அவர் மனம் இளகவே யில்லையே? சாரதா மீது தனக்குள்ள அன்பை வெட்கத்தை விட்டு வெளியிட்ட போதும் கூட வேதமூர்த்தி சம்மதிக்கவில்லையே? சிவராமனைப் பார்த்துச் சிரித்தார்.

''நீ இவ்வளவு அற்பமானவன் என்று நான் நினைக்கவில்லை. சாரதாவிடம் மனத்தைப் பறி கொடுத்திருக்கிறாய் என்ற செய்தி வந்தபோது நான் நம்பவில்லை. ஆனால் நீயே ஒப்புக் கொள்ளும்போது? சிவராமன், என்னுடைய வாரிசாக நீ இருப்பாய் என்ற நம்பிக்கையிலிருக்கிறேன். இப்படி ஒரு பெண் மீது பிரியம் வைத்து அற்பமாகி விடுவாய் என்ற நினைவுக்கே இடமில்லை'' என்றார் வேதமூர்த்தி கண்டிப்புடன்.

வேதமூர்த்தியின் கோபம் கொந்தளித்த முகம், சிவராமனின் மனக்கண் முன்னால் தோன்றிப் பயமுறுத்தியது.

சீனாவிலிருந்து புதுடில்லி வந்த பிறகு, தலைவருடனேயே சில நாட்கள் தங்கியிருந்தான். சீனாவிலிருந்து அவன் கொண்டு வந்திருந்த கடிதத்தைப் படித்ததும் வேதமூர்த்தியின் முகம் மலர்ந்தது. அதில் என்ன செய்தி இருக்கும் என்பதைச் சிவராமனால் ஊகித்தறிய முடியவில்லை.

ரஷ்யாவிலும், சீனாவிலும் தனக்கு ஏற்பட்ட ஏமாற்றத்தை வேதமூர்த்தியிடம் அவன் கூறியபோது தலைவர் சிரித்தார்.

''கட்சிச் சித்தாந்தங்களையும், விதிமுறைகளையும் நெட்டுருப் போட்டிருக்கிறாயே தவிர, யதார்த்த பூர்வமாகச் சிந்திக்கப் பழகவில்லையே. பரம்பரை பரம்பரையாய் பூர்ஷ்வா வர்க்கத்தினரின் பிடியிலிருந்து வந்ததால், விடுபட முடியாமல் இன்னும் திணறுகிறாய் போலிருக்கிறது. கட்சியின் ஆட்சியைப் பாரத நாட்டின் கலாசாரத்தோடு இணைத்துப் பார்க்காதே, சிவராமன்! கம்யூனிஸ சித்தாந்தமே ஒரு தனி கலாசாரந்தான். இது ஒரு நாட்டையோ, கண்டத்தையோ சார்ந்ததல்ல. உலகம் முழுவதற்கும் பொதுவானது'' என்றார், வேதமூர்த்தி.

அவருடைய தர்க்கம் புத்தியை மயங்க வைத்ததே தவிர, சிவராமனின் சந்தேகங்களைக் களையவில்லை. அவன் வெளிநாட்டுப் பயணத்திலிருந்து திரும்பிய பத்தாம் நாள், கல்கத்தாவில் மாநிலத் தலைவர்களின் இரகசியக் கூட்டம் நடைபெற்றது. உலகக் கம்யூனிஸ்ட் மகாநாட்டுக்குச் சென்று திரும்பிய பிரதிநிதிகளின் அறிக்கையைச் சமர்ப்பிப்பதற்காக அந்த விசேஷக் கூட்டத்தைத் தலைவர் வேதமூர்த்தி கூட்டியிருந்தார். கூட்டத்துக்கு இந்தியாவின் எல்லா மாநிலங்களிலிருந்தும் கட்சித் தலைவர்கள் வந்திருந்தனர். கல்கத்தாவிலிருந்த கம்யூனிஸ்ட் கட்சிக் காரியாலயத்தில் இரவு ஒன்பது மணிக்குக் கூட்டம் தொடங்கியது. உலகக் கம்யூனிஸ்ட் மகாநாட்டுக்குச் சிவராமனோடு சென்றவர்கள், பயணத்தைப் பற்றியும், ரஷ்யாவிலும் சீனாவிலும் ஏற்பட்டிருக்கும் புரட்சிகரமான முன்னேற்றங்களைப் பற்றியும் விரிவாக உணர்ச்சி பொங்கப் பேசினர். கடைசியில் சிவராமன் பேச எழுந்தான். தலைவர் வேதமூர்த்தி, அவனை மிகுந்த அக்கறையோடு உற்றுக் கவனித்தார். அவன் யாரையும் கவனிக்காமல், பேசுவதற்காக அமைக்கப்பட்டிருந்த உயரமான மேஜை முன்பு போய் நின்றுகொண்டு பேசத் தொடங்கினான்.

எல்லோரும் அவனையே வியப்புடன் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

# இவர்தான் சங்கரன்

அன்பு நிறைந்த கணவர் • தெம்பே உருவான தந்தை • திறமை மிக்க குடும்பத் தலைவர்

## "எது 'அதுவோ' அதேதான் எனக்கு வேணும்"

நாள் முழுவதும் தெம் போடு இருக்க விரும்புகிறார் சங்கரன். எனவே, நாள்-தோறும் அவர் மனைவி அவருக்கு ''ஹார்லிக்ஸ்'' அளிக்கிறார். ஆடை நிறைந்த பால், செழுமை-யான கோதுமை, மற்றும் இதர உணவுப் பொருள்கள் நிறைந்த ''ஹார்லிக்ஸை'' 80 ஆண்டுகளுக்கும் மேலாக, டாக்டர்கள் சிபாரிசு செய்து வருகிறார்கள். நீங்களும், உங்கள் குடும்பத்தாரும் உடல் நலத்தோடும், உற்சா-கத்தோடும் விளங்க நாள் தோறும் ''ஹார்லிக்ஸ்'' அருந்துங்கள்.




**'ஹார்லிக்ஸ்'– ஆம் அதேதான் !**

அவர்கள் என்ன எதிர் பார்த்தார்களோ, அதற்கு நேர் எதிர்த் திசையில் அவனுடைய பேச்சு சென்று கொண்டிருந்தது. ரஷ்யாவையோ, அல்லது சீனுவையோ அவன் ஒரு முறைகூடப் புகழவில்லை! அங்கு அவனுக்கு ஏற்பட்ட ஏமாற்றங்களையும், அவனுடைய சந்தேகங்களுக்குச் சரியான பதில் சொல்லாமல் ரஷ்யர்களும், சீனர்களும் மழுப்பியதையும் தெளிவாக எடுத்துச் சொன்னபோது எல்லோரும் திகைத்தனர். தலைவர் வேதமூர்த்தியின் முகம் கோபத்திஞல் சிவந்து கொண்டிருந்தது. நரேந்திர போஸ் மட்டும் மலர்ந்த முகத்துடன் சிவராமனின் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தார். சிவராமன் கடைசியில் சொன்ஞன்: ''தோழர்களே! என்னுடைய பயணம் பெருத்த ஏமாற்றந்தான். இங்குள்ள தொழிலாளர்களை விட அங்குள்ளவர்கள் தீவிரமாக உழைக்கிருர்கள். இங்குள்ளவற்றை விட அங்கு பெரிய தொழிற்கூடங்கள் இருக்கின்றன. இங்கு நடைபெருத புரட்சியெல்லாம் அங்கு நடைபெற்றிருக்கிறது. இன்று இந்தியாவுக்கு இல்லாத மதிப்பும் மரியாதையும் ரஷ்யாவுக்கு இருக்கிறது...... ஆனல், பாட்டாளிகளின் சொர்க்க பூமி என்று வர்ணிக்கப்படும் ரஷ்யாவிலும் சீனுவிலும் ஒன்றே ஒன்றை மட்டும் தேடித் தேடி அலைந்தேன்...''

சத்தியம் தான் உயிர் மூச்சு
சாந்த மூர்த்தி காந்திக்கென்று
நித்தியம் தான் பேசுகின்ருர்;
நடந்து காட்ட கூசுகின்ருர்.
சத்தியும் அறிவாளும் தான்
சோஷலிஸம் என்று கூறி,
புத்தியும் பேதலித்தார் பின்
புது உறவு கொண்டுகின்ருர்!

## "வேஷலிஸம்"

சொன்ன சொல்லை மறந்து விட்டு,
சொந்த சுய நலத்துக்காக
மன்னர்களின் உரிமைதனை
மதிக்காமல் பறித்ததுடன்
பொன்னனைய பெரியோர் தம்
புகழுரையை இகழ்கின்ருர்.
சொன்னதுதான் சோஷலிஸம்
சொல்லப் போனல் வேஷலிஸம்!

— விருத்தாசலம் பார்த்திபன் —

சிவராமன் பேசுவதை நிறுத்திவிட்டு எதிரேயிருந்த தலைவர்களை உற்றுப் பார்த்தான். எல்லோருடைய கண்களும் அவனையே துளைத்துக் கொண்டிருந்தன. அறையில் மௌனம் அழுத்திக் கொண்டிருந்தது. சிவராமன் தொடர்ந்து பேசினுன்:

''சுதந்திரத்தைத் தேடினேன். பல இடங்களில் தேடிப் பார்த்தேன். அது மட்டும் அங்கு இல்லவே இல்லை. இங்கு ஒரு சாதாரணத் தொழிலாளி அனுபவிக்கும் சுதந்திரமும் உரிமையும் அந்தப் பூமியில் இல்லை! மனிதனின் உணர்வும் ஆசைகளும் அங்கு கட்சியின் பிடியில் சிக்கித் திணறிக் கொண்டிருக்கின்றன. தோழர்களே, என்னுடைய பயணத்தில் நான் மிக மிக உற்சாகமடைந்தது எப்போது தெரியுமா? புதுடில்லி மண்ணில் திரும்பக் கால் வைத்துச் சுதந்திரக் காற்றை மூச்சு முட்ட உள்ளே இழுத்த போதுதான். தோழர்களே, பட்டினி கூடக் கிடக்கலாம். ஆனல் சுதந்திரம் அற்று வாழ முடியாது. என்னுடைய பயணத்தினுல் என்னுடைய சிந்தனையில் தோன்றியவை இவைதாம். — நம்முடைய கட்சி நம்மைச் சேர்ந்தது. ரஷ்யாவையோ, சீனுவையோ நாம் திரும்பிப் பார்க்க வேண்டியதில்லை. நம்முடைய கலாசாரத்துக்கும் பண்பாட்டுக்கும் இசையக் கட்சியின் விதி முறைகளை மாற்றி, ரஷ்ய — சீனப் பிடியி

விருந்து நம்மை விடுவித்துக் கொண்டு விட வேண்டும். நமக்கு வழிகாட்ட ரஷ்யாவோ, சீனாவோ தேவையில்லை. நமக்கென்று தனி வழி வகுத்துக் கொள்ளலாம். நாம் புரட்சி செய்தாலும், உள்நாட்டுப் போரை நடத்தினாலும், எதுவும் பூரணமாக நம்மைப் பற்றிய, இந்த நாட்டைப் பற்றிய விஷயமே தவிர, இதில் ரஷ்யாவோ, சீனாவோ தலையிட உரிமை கிடையாது. நம் நாட்டு அரசியலில் வெளிநாட்டார் தலையிட அனுமதித்தால் நாடு முழுவதுமே ஒரு நச்சுப் பொய்கையாகி விடும். பிறகு அதிலிருந்து நாம் மீளவே முடியாது. இங்கு எது நடந்தாலும் அது, இந்தியப் பாணியில், இந்திய கலாசாரம் சிதைவுறாமல், இந்தியப் பண்பாட்டுடன் தான் நடைபெற வேண்டுமே தவிர அதில் ரஷ்ய வாடையோ, அல்லது சீனாவின் நாற்றமோ விச வேண்டியதில்லை. நமக்கே சிந்திக்கத் தெரியும். மாஸே துங்கின் சிந்தனையைக் கடன் வாங்கத் தேவை இல்லை....''

இந்தச் சமயத்தில் கேரளத்துத் தலைவர் குறுக்கிட்டுக் கேட்டார்:

''உங்களுடைய சிந்தனையையும் போக்கையும் மக்கள் ஏற்காவிட்டால்....?''

''ஏற்கும்படி செய்வதுதான் நம்முடைய பணி. அதற்காக மாற்றானை உள்ளே அதிகாரம் செலுத்த விடுவதா....? நம்முடைய மனைவி நம் சொற்படி கேட்கவில்லையென்றால், மாற்றானைக் கூப்பிட்டு அடக்கச் சொல்வதா?'' என்று கேட்டு விட்டுக் கேரளத் தலைவரை வெறிக்கப் பார்த்தான் சிவராமன். நரேந்திர போஸ், தம்மை மறந்து உற்சாகத்துடன் கைகளைத் தட்டினார். உடனே நாலைந்து தலைவர்கள் அவரைத் தொடர்ந்து கைதட்டினார்கள். தலைவர் வேதமூர்த்தி, மிகுந்த கோபத்துடன் நரேந்திர போஸ் இருந்த திசையில் திரும்பிப் பார்த்தார். பிறகு சிவராமனை முறைத்துப் பார்த்தார். சிவராமன் தொடர்ந்து பேசினான்:

''மாஸ்கோ மகாநாடு ரஷ்யத் தலைவர்களைப் பொறுத்தவரையில் பெரிய வெற்றிதான். ரஷ்யத் தலைவர்களின் பேச்சும் பார்வையும் உலகத்திலுள்ள மார்க்ஸீயவாதிகள் அனைவருக்கும் தாங்களே எஜமானர்கள் என்று உணர்த்தும் பாணியில்தான் அமைந்திருந்தன. ரஷ்ய மக்களின் மனத்தில் அப்படி ஓர் அபிப்பிராயத்தைப் பதிய வைப்பதில் ரஷ்யத் தலைவர்கள் மிகுந்த அக்கறை கொண்டிருந்தார்கள். அந்த யஜமானத்துவம்தான் என் நெஞ்சில் உறுத்திக் கொண்டேயிருக்கிறது....''

இந்தச் சமயத்தில் தலைவர் வேதமூர்த்தி, திடீரென்று எழுந்து நின்று குறுக்கிட்டுப் பேசினார்.

''இங்கு நமக்குள் தர்க்கம் செய்வதற்காகக் கூடவில்லை. சிவராமன்! உன்னுடைய சிந்தனையைப் பற்றிக் கூறி விட்டாய். உட்கார். நான் பதில் சொல்கிறேன்'' என்று கூறியதும் சிவராமன் தன் பேச்சை நிறுத்தி விட்டு அமர்ந்தான். வேதமூர்த்தி சொன்னார்:

''நாம் ரஷ்யாவையோ அல்லது சீனாவையோ எஜமானர்களாகக் கொள்ளத் தேவையில்லைதான். கார்ல் மார்க்ஸ் காட்டிய வழியில், மாஸே துங் காட்டும் பாதையில் நம் சிந்தனை தொடர்கிறதே ஒழிய ரஷ்யாவையோ அல்லது சீனாவையோ நாம் எஜமானர்களாகக் கொள்ளவில்லை. உள்நாட்டுப் போர் தொடங்கித் துப்பாக்கி முனையில் நாம் ஆட்சியைக் கைப்பற்றி விட்டோமேயானால், பிறகு, நமக்கு ரஷ்யாவின் துணையோ, சீனாவின் பக்க பலமோ தேவையில்லை. அதுவரைக்கும் நாம் ரஷ்யாவையும் சீனாவையும் எதிர்பார்த்துத் தான் தீரவேண்டும்'' என்று கூறிவிட்டு அமர்ந்தார் தலைவர் வேதமூர்த்தி.

சிவராமனுக்கு அவர் பதில் திருப்தி தரவில்லை. தான் மீண்டும் மறுத்துப் பேசினால் அது வேதமூர்த்திக்குப் பிடிக்காது என்று தெரியுமாதலால் வாளாவிருந்தான்.

பஞ்சாபிலிருந்து வந்திருந்த குர்னாம் சிங் என்பவர் ஏதோ பேசுவதற்காக எழுந்தார். ஆனால் வேதமூர்த்தி அவரை முறைத்துப் பார்த்து விட்டு உட்காரும்படி கையை அசைத்ததும் குர்னாம் சிங் பேசாமலேயே தம் இடத்தில் பதுங்கி விட்டார்.

கூட்டம் முடிந்தபோது இரவு ஒரு மணி ஆகிவிட்டது. சிவராமன் உற்சாகமிழந்து சோர்வுடன் தன் அறைக்குப் போய்ச் சேர்ந்தான். கூட்டத்தில் வேதமூர்த்தி குறுக்கிட்டு அவனுடைய பேச்சைத் தடை செய்தது அவனுடைய நினைவில் உறுத்திக் கொண்டேயிருந்தது. தலைவரின் சர்வாதிகாரப் போக்கு அவனுக்கு எரிச்சலை மூட்டினாலும், அவருக்கு எதிரே இருக்கும்போது அவருக்குப் பணிந்துவிடத்தான் முடிந்ததே தவிர, எதிர்க்க முடியவில்லையே. எதிர்க்க முடிந்திருந்தால் இந்தத் தலைமறைவு வாழ்க்கைக்கு — போலியான இல்வாழ்க்கைக்குத் துணையாகச் சிதம்மாவுக்குப் பதில் சாரதாவை அல்லவா அழைத்து வந்திருப்பான்?—

(தொடரும்)




ஃப்ளூரோ கார்பன் முனை கொண்ட

# பிரின்ஸ்

ப்ளூ பிளேடுகளை உபயோகியுங்கள்

# பாலைவனத்து நிழல்

எதிரே, கட்டிலில், பூத்துக் குலுங்கிய வண்ண மலர்க் கொத்தென, ஆழ்ந்த நித்திரையில் ஆழ்ந்திருந்த தன் அருமை மகள் சீதாவைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தார் ராகவன். சில விநாடிகள் தான். அழகிய அந்தச் சுருண்ட கேசம், எடுப்பான மூக்கு, மூடியிருந்த கண் இமைகளில்கூட ஒரு கவர்ச்சி — நிச்சயம் அழகில் தன் தாயாரை அப்படியே உரித்து வைத்திருந்தாள் அவள்.

கால்கள் தன்னை யறியாமல் அறையின் மறு கோடிக்கு அழைத்துச் செல்வதை உணர்கிறார் அவர். அதோ அவர்களுடைய திருமணப் போட்டோ. அதிலிருந்த பெண் உருவத்தையும், சீதாவின் உருவத்தையும் ஒப்பிட்டு மகிழ்கிறது அவர் மனம். அந்த மகிழ்ச்சி கூட ஒரு கணம்தான்.

அந்தத் தாயார் எங்கே இப்போது? யாருக்கும் பதில் சொல்லத் தேவையில்லை. ஆனால் அவருக்குள்ளே உருவாகி, வளர்ந்து செய்கைகளின் பலாபலன்களை யெல்லாம் சுட்டிக் காட்டி வந்ததே அந்த மனச்சாட்சி, அதற்குப் பதில் சொல்லாமல் எவ்வளவு நாட்கள் அவர் ஏமாற்ற முடியும்? பல வருஷங்களாக மௌனம் சாதித்து, உணர்விழந்து போயிருந்த அந்தப் பொல்லாத மனச்சாட்சி, ஏன் கடந்த சில நாட்கள் மட்டும் முளை விட்டுப் படர்ந்து அவர் சிந்தனை முழுவதையும் ஆக்கிரமிக்க வேண்டும்?

சீதாவை மறுமுறை பார்க்கிறார் அவர். அன்று மாலை நடந்த அந்தச் சம்பவம் மறுபடியும் நிழலாடுகிறது. கல்லூரியிலிருந்து தாமதமாக வீடு திரும்பிய சீதா, அவரைக் கண்டதும், வயதுப் பெண்களுக்கு உரித்தான வெட்கத்தை மறந்து விசும்பி, விசும்பி அழுகிறாள்.

''என்னம்மா நடந்தது? ஏனம்மா இப்படி?'' பதறுகிறார் அவர்.

கல்லூரியிலிருந்து வீடு திரும்பும் வழியில் தனியே நடந்து வந்து கொண்டிருந்த தன்னிடம் தகாத முறையில் நடக்கத் துணிந்த 'காலி' ஒருவனுடைய செய்கையைத் தாயாரிடம் ஒரு மகள் சொல்ல வேண்டியதை, வார்த்தைகளை ஒழுங்குபடுத்தித் தந்தையிடம் முறையிட்டபோது, அந்த வார்த்தைகள் ஏன் அவர் மனத்தில் அம்பாகத் தைக்க வேண்டும்? எவ்வளவோ பெண்கள் எவ்வளவு தைரியமாக நடந்து கொள்கிறார்கள்! பேதைப் பெண். பயத்திலும் தாயையா கொள்ள வேண்டும்!

சீதா நிம்மதியாக உறங்கிக் கொண்டிருந்தாள். ஆனால் அவரோ, அந்தச் சிறிய அறையில் கைகளைப் பின்னால் கட்டியவாறு வலம் வந்து கொண்டிருந்தார். எவ்வளவு தடவைகள் நடை போட்டிருப்பாரோ, அந்தக் கால்களுக்குத்தான் தெரியும்.

''காவேரி'' — அவரை அறியாமல் வார்த்தைகள் வெளியே வருகின்றன.

''காவேரி! எவ்வளவு பெரிய பிரச்னையாகப் போய்விட்டாய் நீ'' — மனைவி காவேரியை எதிரே நிறுத்திப் பேசுவது போல் ஒரு பிரமை.

ஒன்று, இரண்டா? சுமார் இருபது வருஷங்கள். இளமையின் வேகத்தில் நிதானம் தெரியாத, விளைவுகளை ஆலோசிக்காத ஒரு நிலையில், அற்பக் காரணங்களைத் தேடிக் கண்டுபிடித்து, பணத் தெம்பினால் நீதிமன்றப் படியேறி, அவ்வளவு பேர் முன்னிலையிலும் காவேரியை விவாகரத்து செய்து, வழக்கில் வெற்றி கண்ட இறுமாப்பில் அவளைப் பார்த்ததற்கும், தாயின் அருகில் மருண்டு விழித்துக் கொண்டிருந்த பட்டுப் பூச்சி போன்ற மூன்றே வயதான இந்தச் சீதாவை 'வெடுக்'கென்று இழுத்துத் தன்னிடம்தான் அவள் இருக்க வேண்டும் என்று கூறியதற்கும் பொருள் என்ன என்பதை உணர்வதற்கே அவருக்கு இவ்வளவு வருஷங்களாயிற்று. மூன்று வயதுக் குழந்தை அன்று ஒரு பிரச்னையாக இல்லை. ஆனால் இன்று?

அப்படித்தான் வேறு ஒருத்தியுடன் வாழ்க்கையைப் பிணைத்துக் கொண்டாரே, அதுவாவது நிலைத்ததா? அதுவும் பகற் கனவாகத் தானே போய்விட்டது?

சே, இப்படித்தான் மனிதன் குறுகிய வாழ்நாளைச் சிக்கல் நிறைந்ததாக்கி விடுகிறான். பிறகு வெளியே வருவதென்பது ஆயுட்காலத்திலேயே முடியாத ஒன்றாகி விடுகிறது.

மறுநாள் காலை கையில் ஆவி பறக்கும் காப்பியுடன் எதிரே நின்ற சீதாவையே கண் கொட்டாமல் பார்த்தவர் மனத்தில் முதல் நாள் இரவு நிலவிய பயங்கரம் சற்றுக் குறைந்திருந்தது. காப்பியை வாங்கி ஆர்வத்துடன் பருகியவர், ''சீதா! இன்றைக்குச் சாயந்திரம் கல்லூரியிலிருந்து சீக்கிரமே வந்து விடும்மா. அடுத்த வீட்டு மாமியைத் துணைக்கு வைத்துக் கொள். வெளியூருக்கு ஒரு காரியமாகப் போய்விட்டு, நாளை இரவே திரும்பி விடுகிறேன்'' என்றார்.

''என்னப்பா அப்படி அவசரம்? எந்த ஊருக்கப்பா போகப் போறீங்க? நான் வர வேண்டாமா?''

''ஆமாம்மா; அவசரமாகத்தான் போகிறேன். காலம் கடந்து விட்டது. ஒரு நாள் பொறுத்துக்கொள். உன் கேள்விகள், என் பிரச்னைகள் எல்லாவற்றுக்கும் விடை கிடைத்து விடும்.''

அன்று இரவு ஓடும் வண்டியின் வேகத்தோடு அலைமோதிய சிந்தனைச் சுழலில் சிக்கி, பயணம் செய்து கொண்டிருந்தார் அவர். பொழுது புலரும் நேரத்தில் வண்டி அந்த ஊரை அடைந்தது. காவேரியின் பிறந்த ஊர், பிரச்னைக்குரியவள் உருவாகி, வளர்ந்து, பிரச்னையின் முடிவைத் தேடிக் கொண்ட பிறந்த ஊர்.

திருமணமான புதிதில் இரண்டொரு முறை வந்திருந்தார் அவர். ஆனால் இப்போது அவர் நிலை?

அந்தப் பழைய வீட்டைக் கண்டுபிடித்து மனத்தில் ஆயிரம் கற்பனைகளுடன் கதவைத் தட்டியவருக்குக் கதவைத் திறந்த வயதான பெண்மணியைக் கண்டதும் ஒரே வியப்பு. அங்கும் அவரைப் போல் இழப்புக்கள்தான் ஏராளம். அந்த அம்மாளின் உறவு முறையைக் கண்டுபிடித்து, தன் உறவைச் சொல்லித் தேடி வந்தவர் பெயரைச் சொன்னபோது, மற்றுமோர் ஏமாற்றம் அவரை வரவேற்றது. நீண்ட நேரப் பிரயாசைக்குப் பிறகு அந்த அம்மாள் காவேரி அங்கு இல்லை என்றும், சென்னையில் போய்த் தங்கி விட்டதாகவும் கூறிவிட்டாள். அந்தச் சிறிய தெருவிலேயே நாலைந்து வீடுகளுக்குள் நுழைந்து வெளியே வந்த அந்த அம்மாள் காவேரியின் விலாசத்தை விசாரித்துக் கொண்டு வந்தபோது சுமார் ஒரு மணி நேரத்துக்கு மேல் ஆகி விட்டது. அந்த அம்மாளிடம் விடை பெற்றவர் ரயில்வே ஸ்டேஷனுக்குத் திரும்பி விட்டார். தேடி வந்த அவளே இல்லாதபோது, ஊரில் என்ன இருக்கிறது?

அன்று இரவே ஊருக்குத் திரும்பிவிட்டார் ராகவன். காவேரியின் வைராக்கியத்துக்கு ஓர் உரைகல்லாக இந்தச் செய்கை தோன்றியது அவருக்கு. சென்னையிலேயே இருக்கிறாள்! எவ்வளவு வருஷங்களோ யார் கண்டார்கள்?

மறுநாள் மாலை; சீதாவை அழைத்துக் கொண்டு நீண்ட நேரப் பிரயாசைக்குப் பிறகு அந்த விலாசத்தைக் கண்டுபிடித்த ராகவன் திகைத்தார். கிட்டத்தட்ட ஒரு பங்களா மாதிரி நவீன முறையில் கட்டப்பட்டிருந்த வீடு அது. காவேரி இவ்வளவு வசதிகளுடன் இருக்கிறாளா? மனத்தில் ஏற்பட்ட பிரமிப்பு நீங்கு முன் ஒரு பெண் வெளிப்பட்டாள்.

''காவேரி என்று ஓர் அம்மாள் இருக்கிறாளா இந்த வீட்டில்?'' என்று கேட்டார் ராகவன்.

''ஓ, காவேரி மாமியா?'' என்றவள், ''காவேரி மாமி, உங்களைப் பார்க்க ஒரு மாமாவும், ஒரு பெண்ணும் வந்திருக்கா'' என்று அறிவித்து விட்டு, 'கேட்'டைத் திறந்து வெளியே காத்திருந்த காரில் ஏறிச் சென்றாள்.

எண்ணக் கதிர்கள் மனம் முழுவதும் வியாபிக்க, ஆர்வத்துடன் வீட்டின் உள் பக்கத்தையே பார்த்துக் கொண்டிருந்தார் ராகவன். மங்கிய விளக்கொளியில் தயங்கித் தயங்கி வெளியே வந்து இப்போது தன் எதிரே நின்று கொண்டிருந்தவளைப் பார்த்தவர் அப்படியே திகைத்து நின்று விட்டார். ஆயிரம் சம்மட்டிகள் தலையில் தாக்குவது போன்ற ஒரு பிரமை. காவேரியா அது! அழகுப் பதுமையாகத் திகழ்ந்த தன் மகள் சீதா அப்படியே தாயை உரித்து வைத்திருப்பதாகப் பெருமைப்பட்டாரே? அந்தக் காவேரியா இவள்? காலந்தான் எவ்வளவு மறைக்க முடியாத வடுக்களை உருவாக்கி விடுகிறது? அட கடவுளே! வாழ்நாளில் எவ்வளவு பெரிய பாவத்தைச் செய்து விட்டார் அவர். நீர் மல்கிய கண்கள் அவர் பார்வையை மறைக்க வார்த்தைகள் வெளி வர முடியாமல் தவித்தன. சீதாதான் அந்த அமைதியைக் கலைத்தாள்.

''அப்பா, அப்பா. இந்த மாமிதாம்பா அன்னிக்கு அந்த முரடனிடமிருந்து என்னைக் காப்பாற்றினாளப்பா. மாமி நீங்க இங்கேயா இருக்கேள்!'' உரிமையுடன் காவேரியின் இரு கைகளையும் பிடித்துக் கொண்டாள் சீதா. ராகவனின் உடல் சிலிர்த்தது. ''காவேரி, வந்து, வந்து, எனக்கு என்ன சொல்றதுன்னே தெரியலேம்மா. என்னை...'' வார்த்தைகளை முடிக்க முடியாமல் திணறினார் அவர்.

''ம், எதற்குத்தான் தெய்வம் இப்படி ஒரு சந்தர்ப்பத்தைக் கொடுத்து உங்களை இங்கே அழைத்து வந்ததோ, தெரியலை'' — வேதனை



யின் பிரதிபலிப்பாக வார்த்தைகள் வெளி வந்தன காவேரியிடமிருந்து.

''எல்லாம் இந்தப் பெண்ணால் வந்தது!'' சீதா விழித்தாள்.

''ஆமாம் காவேரி, பெண்ணால்தான் எல்லாப் பிரச்னைகளும் உருவாகின்றன. இப்போது கூட உன் அன்புப் பிச்சையை யாசித்துப் போகத்தான் வந்திருக்கிறேன். உன் மகளை உன்னிடம் ஒப்படைத்து விடுகிறேன். இனிமேல் நீதான் அவளுக்கு எல்லாம். மனம் விட்டுச் சொல்கிறேன். மன்னிக்க முடியாத தவற்றைச் செய்து விட்டேன். தவற்றைச் செய்தவனே இதோ உன் முன்னால் மனமுடைந்து நிற்கிறேன். கணவன் என்ற மதிப்பை என்றோ நான் இழந்திருக்கலாம். ஆனால் என் வயதுக்கும் நிலைக்கும் மதிப்புக் கொடுத்தாவது நீ சீதாவுக்காக...'' வார்த்தைகளை முடிக்கவில்லை ராகவன்.

''நிச்சயம் அந்தப் பொறுப்பை என்றோ நான் ஏற்றுக் கொண்டு விட்டேன். சீதாவின் வளர்ச்சியைக் கண்டு, அணு அணுவாக, கடந்த சில வருடங்களாகப் பெருமிதப்பட்டு ஏக்கப் பெருமூச்சு விட்டவள் நான். அவளுடைய நல்வாழ்வுக்காக, உங்கள் தகுதிக்கு ஏற்ற ஓர் இடத்தில் அவளுக்கென்று ஒரு பையனைப் பார்த்திருக்கிறேன். என்னுடைய நிலையில் இவ்வளவுதான் முடிந்தது. சற்றுப் பொறுங்கள்'' என்று உள்ளே சென்றவள் சற்று நேரத்தில் திரும்பினாள். ''இந்தப் பெட்டியில் என் சேமிப்பு; சீதாவுக்காக இந்த ஊரிலேயே உங்களுக்கு அருகிலேயே இவ்வளவு வருஷங்களாகப் பாடுபட்டு உழைத்துச் சேமித்த பணம் சுமார் ஆயிரம் ரூபாய் வரை உள்ளது. தாயின் சீதனமாக இதை அவளுக்கு அளித்து விடுங்கள். அவளாவது நன்றாக இருக்கட்டும்'' — பேச்சை முடிப்பதற்குள் விசும்பல்கள் நெஞ்சை அடைத்தன. ராகவனின் குரல் கரகரத்தது. பெட்டியையும் ஒரு விலாசத்தையும் அவரிடம் நீட்டினாள்.

''காவேரி, நீ இல்லாமலா இந்தக் கல்யாணம்? அன்று ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தியே ஒரு யாகம் செய்ய வேண்டிய நிலையில் அன்னை சீதாபிராட்டி இல்லாத குறையை நிவர்த்திக்க அவளைப் போல் திருவுருவம் ஒன்றைச் செய்து அருகில் வைத்துக் கொண்டு யாகத்தை நடத்தினாராம்? திருமணம் கூட யாகத்துக்கு ஒப்பானதுதானே. இந்தச் சீதாவின் திருமணம் நீ இல்லாமல் நடக்காது.''

அவரையே ஊடுருவிப் பார்த்தாள் காவேரி. திருமணப் பொருளையும் புனிதத்தையும் உணரும் ஞானோதயம் ஏற்பட இவ்வளவு வருஷங்கள் ஆகியிருந்தன அவருக்கு.

''நான் நிச்சயம் வருகிறேன். என் பெண்ணின் கல்யாணத்தை ஜாம், ஜாம் என்று நடத்துவேன். நீங்கள் ஏற்பாடுகளைச் செய்யுங்கள்'' — விழியோரம் துளித்த நீர்த் துளிகளைப் புடவைத் தலைப்பால் துடைத்துக் கொண்ட காவேரி சீதாவைப் பார்த்தாள்.

''என்ன சீதா அப்படிப் பார்க்கிறாய்? ஏதடா இவள் ஏதேதோ சம்பந்தமில்லாமல் பேசுறாளேன்னு பார்க்கிறாயா? இப்படித் தானம்மா சம்பந்தமில்லாமல் எவ்வளவோ காரியங்கள் நடந்து விடுகின்றன இந்த உலகத்தில்'' என்றவள், ''சரி, நீங்கள் போய் விட்டு வாருங்கள். நான் சொன்ன இடத்தையே ஏற்பாடு செய்யுங்கள். தெய்வம் உங்களுக்கு அனுக்கிரகம் செய்யட்டும்'' என்றாள்.

''காவேரி! எனக்கு எதுவுமே பேசத் தோன்றவில்லை. அப்போ நீ வரவில்லையா இப்போது?''

காவேரி தலையை ஆட்டினாள். ''வேண்டாம். அவசரப்படாதீர்கள். இந்த அவசரம் தான் விபரீத விளைவுகளைக் கொடுத்து விடுகிறது'' என்றாள். சொற்களின் கனத்தைத் தாங்க முடியாதவாறு கிளம்பினார் ராகவன்.

வழி முழுதும் தந்தையும் மகளும் எதுவுமே பேசவில்லை. சீதாவுக்கு எல்லாமே கனவில் நடப்பது போன்ற நிலை. தான் தாயில்லாப் பெண் என்று துணிந்து எப்படித்தான் இவ்வளவு பெரிய பொய்யைச் சொல்ல முடிந்ததோ அவரால்? இல்லாத தாயைக் கண்ட மகிழ்ச்சி, இவ்வளவு வருஷங்களாக அந்த உண்மையை மறைத்து வைத்த தந்தை மீது ஏற்பட்ட வெறுப்பு மாறி மாறி மனத்தைப் பிழிய, மௌனமாகத் தந்தையைத் தொடர்ந்து வந்து கொண்டிருந்தாள் அவள்.

சீதாவின் திருமண ஏற்பாட்டில் துரிதமாக ஈடுபட்டு விட்டார் ராகவன். வாழ்க்கையில் அவர் செய்யத் தவறிய கடமைகள் எவ்வளவோ? தம் மகளுக்கு அன்று ஏற்பட இருந்த விபத்து, தற்செயலாகக் காவேரி தன் மகள் சீதாவைக் காப்பாற்றிய உண்மை— இவை யெல்லாம் சீதாவின் கல்லூரிப் படிப்பை நிறுத்தி விரைவில் அவளுடைய திருமண முயற்சியில் ஈடுபட வைத்தன அவரை.

காவேரி பார்த்து வைத்திருந்த இடத்தையே நிச்சயம் செய்து விட்டார் ராகவன். காவேரியின் வருகையினால் வீடே களை கட்டி விட்டது. தாயும் மகளும் அந்தச் சிறிய வீட்டில் வளைய வந்ததைக் கண்டு பூரித்தார் ராகவன். வேளை தவறாமல் காப்பி, டிபன் எல்லாம் அவர் இருக்கும் இடம் தேடி வந்தன. எல்லாம் காவேரியின் ஏற்பாடு. சுமார் இருபது வருடங்களாக அவர் நடத்தி வந்த வறண்ட பாலைவனப் பயணத்தில் ஒரு சிறு நிழல். அதன் குளிர்ச்சியை அணு அணுவாக அனுபவித்தார் அவர். மனப் புண் ஆறி வந்தது. அன்பு ஊற்றுக் கூடப் பெருக்கெடுத்தது. ஒரே வாரத்தில் எவ்வளவு மாறுதல்கள் அவரிடத்தில்! மனத்துக்குள் கணக்குப்போட்டார் அவர். இந்த இருபது வருஷங்களில் இதுபோன்ற எவ்வளவு வாரங்களை இழந்து விட்டார்! ஈடு செய்ய முடியாத நஷ்டம்!

சீதாவின் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. மாப்பிள்ளை வீட்டார்கள் டெல்லியைச் சேர்ந்தவர்கள். அவர்களுக்கு எல்லாமே திருப்தியாக அமைந்து விட்டன. மறுநாளே ஊருக்குக் கிளம்பி விட்டனர். ராகவன், காவேரி இருவருமே வழியனுப்ப ஸ்டேஷனுக்குப் போயிருந்தனர்.

''அம்மா போயிட்டு வரேம்மா. ரொம்ப வருஷங்களுக்கு அப்புறம் ஏதோ ஒரு கனவு மாதிரி உன்னைச் சந்தித்தேன். உடனே பிரிய வேண்டியிருக்கு. என் மனசிலே இருந்ததையெல்லாம் உன்கிட்ட கொட்டித் தீர்க்கணும்னு நெனைச்சேன். அப்பாவை என்

## திருமணம்



பம்பாய் ஸ்ரீ வி. வெங்கட்ராமன் அவர்கள் குமாரத்தி சௌ. லலிதா B.A.க்கும், சென்னை ஸ்ரீ வி. கோபாலன் அவர்கள் குமாரர் சிரஞ்சீவி **சுவாமிநாதன்,** B.SC.க்கும் சமீபத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்!

# எத்தகைய நறுமணப் புத்துணர்வு

அதனைப் பொழியும் ஒரே ஒரு சோப்

# மைசூர் சந்தன சோப்

தூய சந்தனத் தைலம் அடங்கி
இயல்புடன் மணமூட்டப்பட்ட
மைசூர் சந்தன சோப்பின்
நல்லின்ப நறுமணம்
நாள்முழுதும் உங்களைக்
தழுவிநிற்கும்.

மணங்கமழ் இன்பபோகம் அதை
மணமார விரும்புவீர்கள்



கவர்ன்மெண்ட் சோப் ஃபாக்டரி,
பெங்களூர்-12
(மைசூர் அரசு நிறுவனம்)






B. Dattaram-GSF-5

னென்னவோ கேட்கணும்னு நெனைச்சேன். ஆனால் தாம் செய்த தப்புக்கெல்லாம் பிராயச்சித்தமாக நீ ஆசைப்பட்ட இடத்தையே முடித்து இந்தக் கல்யாணத்தைச் சிறப்பாக நடத்தி விட்டார். மனசிலே உன் உருவத்தை அப்படியே படம் பிடிச்சு வச்சுட்டேன். இனிமேல் நீ என்னை விட்டுட்டுப் போகவே முடியாது. நான் போயிட்டு வரேம்மா'' — கண் கலங்கினாள் சீதா.

ராகவனும் காவேரியும் ஒரு டாக்ஸியைப் பிடித்து வீடு திரும்பினர். இருவருமே அருகருகில் அமர்ந்து செய்த அந்தச் சிறு பயணத்தைப் பெரிதும் விரும்பி, ரசித்த ராகவன் மனத்துக்குள் வேதனைப்பட்டார். வாழ்க்கைப் பயணத்தில் இவ்வளவு வருஷங்களாக, மனைவிக்கு நேர் எதிர்த் திசையில் அல்லவா போய்க் கொண்டிருந்தார் அவர்? அந்த எண்ணமே கசந்தது அவருக்கு இப்போது.

சாப்பிட அமர்ந்தவர், இலையில் பரிமாறப்பட்ட பாயசத்தை அவசரம் அவசரமாக உறிஞ்ச ஆரம்பித்தார். சூடு ஆறாத நிலையில் பாயசம் நாக்கைச் சுட்டு விட்டது. நல்ல வேளை; காவேரி இதைப் பார்க்கவில்லை. அவள்தான் அன்றே சுட்டிக்காட்டி விட்டாளே, எதிலுமே அவருக்கு அவசரமென்று.

சாப்பாட்டை முடித்துக் கொண்டு ராகவன் ஹாலில் வந்து அமர்ந்தார். நீண்ட வருஷங்களுக்குப் பிறகு ஏற்பட்டிருந்த இந்த நிறைவுப் பெருமிதத்தில் அவர் திளைத்திருந்த போது காலடிச் சத்தம் கேட்டுத் திரும்பினார். தன் உடைமைகள் உள்ளடங்கிய அந்தச் சிறு பையைக் கையில் வைத்துக் கொண்டு காவேரி நின்று கொண்டிருந்தாள்.

''என்ன காவேரி, எங்கே கிளம்புகிறாய்?''

''நான் இருக்க வேண்டிய இடத்துக்குத்தான்.'' — நிதானமாக வார்த்தைகள் வெளி வந்தன அவள் வாயிலிருந்து.

''காவேரி, என்ன சொல்லுகிறாய்? இதோ பார், காவேரி, இன்னுமா உன் கோபம் தணியலை? வறண்டு போயிருந்த என் வாழ்வில், உயிர்த் துடிப்பை ஏற்படுத்திவிட்டுத் திடீரென்று எல்லாவற்றையுமே மிதித்து, நெருப்பிலிட்டுப் போகக்காதே. காவேரி, இனிமேல் என்னால் தாங்க முடியாது.''

காவேரி இப்போது வாசற்படியில் இறங்கி விட்டாள்.

''காவேரி! உன்னை மறுபடியும் கேட்டுக்கறேன். என் வேண்டுகோளை மீறி நீ இப்போது போனால், உன் மனசு வெறும் கல்லு இல்லை; பாறாங்கல்லுன்னுதான் அர்த்தம்.''

காவேரி நின்றாள். அவள் வாயிலிருந்து வார்த்தைகள் வெளி வந்தன.



''என்ன! மலர் வளையம் எனக்கு எதற்கு?''

''கல்கத்தாவுக்கு மாற்றலாகிப் போகிறீர்களாமே!''

''ஆமாம், நான் என்றைக்கோ கல்லாயிட்டேன். கணவன் — மனைவி — இந்த இரண்டு பேருக்கும் இடையே ஏற்பட்ட ஒப்பந்தங்கள் சாஸ்திரப் பிரமாணமான உறுதிமொழிகள் எல்லாம் கல்லில் செதுக்கின மாதிரி சாசுவதம்னுட்டு நெனைச்சேன். ஆனால் மெல்லிய நூலிழையில் ஊசலாடிய நம் ஒப்பந்தம் என்றைக்கோ அறுந்து போயிடுத்து. அப்படித்தான் என் வாழ்க்கையில் என்றோ விதி செய்த அந்தச் சதிக்கு நான் அர்த்தம் கொடுத்திருந்தேன். சீதாவுக்காக, இவ்வளவு நாட்களாக, நான் உங்களுடன் சேர்ந்து வாழ்ந்தது, என்னிக்கோ பெரியவர்களால் நமக்கிடையே உருவாக்கப்பட்ட அந்த ஒப்பந்தத்தின் ஒருபகுதிதான். கடைசி அத்தியாயமும் கூட. இனிமேல் நான் ஒரு கணம் இந்த வீட்டில் இருந்தால் கூட என் நிழல் அந்தப் பெண்ணையும் தொடரும். வேண்டாம், அவளுக்கு அந்த நிலை.

''நீங்கள் சொன்னபடி ராமபிரானைப் போல் யாகத்தை முடித்து விட்டீர்கள். இனிமேல் இந்தக் காவேரி வெறும் மண் பொம்மைதான். ஆமாம், வாழ வேண்டிய நாட்களையெல்லாம் வெறும் கற்பனையிலேயே வாழ்ந்து விட்டேன். இனிமேல் வாழ்வதைப் பற்றிக் கற்பனை செய்வதற்குக்கூட உடம்பில் தெம்பில்லை. உங்களை ஒன்று மட்டும் வேண்டிக் கேட்டுக்கறேன். என் போன்ற வயதில், நிலையில் உள்ளவர்கள் வேண்டும் வரமும் அதுதான். நீங்கள் எங்கு இருந்தாலும், 'என் கணவர் எங்கோ இருக்கிறார்' என்ற உணர்வு போதும், இந்த மஞ்சளும் குங்குமமும் நிலைப்பதற்கு. அந்த நிறைவுடன் எஞ்சிய நாட்களை ஓட்டி விடுகிறேன். என்னுடைய இந்த வேண்டுகோளை மட்டும் ஏற்று எனக்கு அனுமதியளியுங்கள்'' என்றவள் கண்களைத் துடைத்துக் கொண்டு, ''நான் வருகிறேன். சீதா வந்தால் சொல்லியனுப்புங்கள்.'' — தடுமாறிக் கொண்டு வெளியே நடந்த அந்தப் பூஞ்சையான உருவத்தையே பார்த்துக் கொண்டிருந்தார் ராகவன். அன்று இருபது வருஷங்களுக்குமுன் அவர் செய்த தீர்மானத்தைச் செயல்படுத்த சட்டத்தின் உதவியை நாடினார் அவர். ஆனால் இன்று காவேரி, மனச்சாட்சியின் துணை கொண்டு தனக்கென ஒரு வழிவகுத்துக் கொண்டு விட்டாள். அதைத் தடுக்க என்ன உரிமை இருந்தது அவருக்கு?

பாலைவனத்தில் இடையே வந்து குளுமை தந்த அந்த நிழல் அகன்று விட்டது. தம் மீது தாக்கும் ஒளிக் கதிர்களின் தீட்சண்யத்தைத் தாங்க முடியாமல், தவித்து நின்று கொண்டிருந்தார் ராகவன்.



மலர்கள், பழங்கள் இவற்றை மற்றும் புலவர்களைப் போலன்றி வள்ளுவர் மிகக் குறைவாகவே உவமைக்காகக் கையாண்டிருக்கிறார்.

அவரது எழுத்தில் அகப்பட்ட மலர்கள் இரண்டே. அவை: அனிச்சம், குவளை.

ஆனால் பழங்களைக் கையாள்வதில் அவர் காட்டிய சிக்கனம் வியப்புக்கு உரியது.

பன்மையில் சொல்லக் கூட முடியாதபடி அவர் எடுத்துக்கொண்ட பழம் ஒன்றே! அந்த ஒன்றும் எது தெரியுமா? நெருஞ்சிப் பழம்! - ''நேஜ்''

□□□□□□□□□

ரோம் மன்னர் நீரோவுக்குப் பார்வைக் கோளாறு ஏற்பட்டிருந்ததால். எப்போதும் ஒரு பெரிய மரகதக் கல்லை வைத்திருந்தார். தம்முடன் உரையாடுபவரது உருவத்தை நன்கு காணும் பொருட்டு, அந்த மரகதக் கல்லை, நீரோ தம் கண் முன்னால் வைத்துப் பார்க்க ஆரம்பித்தாராம்... இதுதான் மூக்குக் கண்ணாடியின் தொடக்கம். படிப்படியாக அது வளர்ந்து முன்னேறி இன்றுள்ள நிலைக்கு வந்திருக்கிறது.

ஆதாரம்: சோவியத் நாடு.
தகவல்: ஏ. சுவாமிநாதன்

புது முறை குக்கரோ அல்லது அடுப்போ என எண்ணுகிறீர்கள். இது ஓர் கேமரா. கடலில் 3000 மீட்டர் ஆழம் வரை ஊடுருவிச் சென்று படமெடுக்கும் 'தண்ணீர் கேமரா' இதனுள் பொருத்தப்பட்டிருக்கிறது. அத்தனை ஆழத்தில் நீரின் அழுத்தத்தைச் சமாளிக்க வேண்டாமா? இல்லாவிடில் காமிரா நசுங்கி விடுமே. ஆகவே இந்தக் கொள்கலத்தில் ஓர் அழுத்தம் சமப்படுத்தும் முறை புகுத்தப்பட்டுள்ளது.

- பி. வி. கி



''பெண் சுருக்கெழுத்தாளர் தேவை. புத்திசாலியான விண்ணப்பதாரர்கள் மட்டும் கவனிக்கப்படுவர்.''

காண்ட் விளம்பரம் - 'நாக

□□□□□□□○□

## பாடத்தில் கூடல்; வகுப்பில் ஊடல்!

திருச்சி தேசியக் கல்லூரியில் சேர்ந்து ஆசிரியராகப் பணி புரிந்து கொண்டிருந்தேன்.

'மிலன்' என்ற சிறு காவியம். அதில் கூடலைப் பற்றிப் பாடம் சொல்லும்படியான இக்கட்டான கட்டம். மாணவர்களுக்கு அதன் பொருளை மாணவிகளின் மத்தியில் அமர்ந்திருந்து கேட்பதில் ஓர் அலாதி ஆவல்! ''விரிவாகப் பொருள் சொல்லுங்கள்!'' என்று பச்சையாகவே கேட்டுக் கொண்டனர்!

எப்படிச் சமாளிப்பது?

''இன்று ஆண்களுக்கு மட்டும் தான் பாடம்: பெண்கள் வெளியே போகலாம்'' என்றேன்.

''என்ன சார் இது?'' மாணவரிடையே முணுமுணுப்பு. சப்பென்று போய்விட்டது அவர்களுக்கு.

ஆண்களுக்கும் பெண்களுக்கும் அந்தப் பாடத்தைப் பொறுத்தவரை தனித்தனியே வகுப்பெடுத்து நிலைமையைச் சமாளித்தேன். - அக்ஷயம்





''நீங்கள் பாடிய பாடல்களை ரேடியோவில் கேட்கும்போது நீங்கள் என்ன நினைப்பீர்கள்?'' என்று லதா மங்கேஷ்கரைக் கேட்டபோது அவர் கொடுத்த பதில்: ''இன்னும் கொஞ்சம் நன்றாகப் பாடியிருக்கலாமே என்று நினைப்பேன்.''

டைம்ஸ் வீக்லி - ''பாலி''

# அழியாத நாள்

## தி. ஜ. ர.

சென்ற நாட்கள் பல சமயம் நினைவில் வருகின்றன. எல்லா நாட்களும் அல்ல. பெரு நிகழ்ச்சிகளைக் கண்ட நாட்கள்; பெரிய அல்லது சிறிய தவறுகளை நாம் இழைத்த நாட்கள்-இவையே நினைவில் வருகின்றன; இவற்றுள்ளும் சமீப நாட்கள் அதிகமாய் அப்படி வருவதில்லை; நெடுங்காலம் கடந்துவிட்ட நாட்களே வருகின்றன. தவறு செய்த நாட்கள் படிப்பினை தருகின்றன. பெரு நிகழ்ச்சிக் காட்சி நாட்கள் மனத்தையும் உலுக்குகின்றன; படிப்பினையும் தருகின்றன. கணக்கிட்டுப் பார்த்தால் வாழ்நாளெல்லாம் தவறே செய்ததாய்த் தோன்றுகிறது. பெரு நிகழ்ச்சிகளைக் கண்ட நாட்களோ மிக்க அபூர்வமாகத்தான் துலங்குகின்றன. என் வாழ்வில் இடைப்பட்ட அத்தகைய ஒரு நாளைப் பற்றியே இங்கே கூற விரும்புகிறேன்.

சுமார் முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னே ஒரு நாள். மகாத்மா காந்தியின் உப்புப் போராட்டத்தில் இர்வின் — காந்தி ஒப்பந்தம் ஏற்பட்டு, அதன் விளைவாக இரண்டாவது வட்டமேஜை மகாநாட்டுக்கு அவர் சென்று திரும்பிய உடனே தொடங்கிய இரண்டாவது போராட்டத்தின் ஆரம்ப காலம். நாடே ஆர்த்துப் பொங்கி எழுச்சி கொண்டிருந்த சூழ்நிலை. எங்கும் கொந்தளிப்பு.

அந்தக் காலத்தில் காரைக்குடி 'ஊழியன்' பத்திரிகையில் துணையாசிரியனாக நான் இருந்தேன். தமிழ்க் கடல் 'ராய. சொ.' அவர்கள் அதன் ஆசிரியர்; அதன் நிர்வாகத் தலைவரும் பெரும் பங்குதாரரும் அவரே. பத்திரிகையை நிறுத்திவிட்டு, இயக்கத்தில் குதித்துச் சிறைபுகுவதென்று அவர் முடிவு செய்தார். நானும் அவரைப் பின்பற்றுவதே நியாயம் என்று தோன்றியது. அவரும் நானும் மதுரை நண்பர்கள் இருவரும் செட்டிமார் நாட்டின் முக்கிய நகரங்களிலெல்லாம் பொதுக் கூட்டத்தில் 144 தடையுத்தரவை மீறிப் பேசுவது என்று ஏற்பாடு ஆயிற்று. இரண்டொரு தினத்தில் காரைக்குடியில் மாபெரும் பொதுக் கூட்டத்தில் பேசினோம். அடுத்துத் தேவகோட்டையில் பேசினோம். அதையடுத்த தினத்தில் சிவகங்கையில் பேசினோம். எங்கள் நால்வரையும் அதிகாரிகள் கைது செய்தார்கள். லைப் — ஜெயிலில் எங்களை அடைத்தார்கள்.

இரண்டாள் உயர இரும்புக் கதவுகள்; கையகலம் இரண்டு மூன்று இரும்புப் பூட்டுகள். கதவுகள் சற்றும் அசைந்து கொடுக்காதபடி இணைக்கும் தாழ்ப்பாள்கள். இவற்றோடு போச்சா? கதவுகளுக்கு வெளியில் எதிரெதிரே தூக்கிப் பிடித்த துப்பாக்கி தாங்கி இருபுறமும் மாறி மாறி நடந்து பாராக் கொடுக்கும் இரண்டு ஜவான்கள். அப்பப்பா! எங்களுக்குத்தான் எவ்வளவு பந்தோபஸ்து! என்றுமே எலும்பும் தோலுமான உருவம் படைத்த என்னை நான் வலிமையற்ற ஒரு பயங்கொள்ளி என்றே நினைத்திருந்தேன். அன்று இந்தக் கனபரங்களையெல்லாம் கண்டபோது, நானும் ஒரு வீரனாய்த்தான் இருக்கவேண்டும் என்ற எண்ணம் தோன்றியது. மண் பொம்மைகளையெல்லாம் மகா வீரர்களாக்கிய சாலிவாகனன் மாதிரி மகாத்மா காந்தி மாற்றிவிட்டாரோ! எங்கள் நால்வரில் மூன்று பேர் திடீரென்று இப்படி வீரர்களானவர்கள். ஒருவர் மட்டும் இதையெல்லாம் இலட்சியமே செய்யவில்லை. ஜெயில் பாஷையில் அவர் ஒரு 'கறுப்புக் குல்லாய்'. பல முறை தண்டனை பெற்றும் சிறைக்குவருகிற சாதாரணக் கைதிகளுக்குக் கறுப்புக் குல்லாய் கொடுப்பது வழக்கம். இதனால் பழைய சிறை அனுபவம் உள்ள அரசியல் கைதிகளையுமே 'கறுப்புக் குல்லாய்' என்று சொல்வது வழக்கமாயிற்று. சிறை என்றாலே பயமும் அருவருப்பும் இருந்த காலம் போய், அரசியலுக்காகச் சிறை செல்வதைத் தாகத்துக்குத் தண்ணீர் குடிப்பது போல் சகஜமாக்கி விட்டவர் நம் நாட்டில் மகாத்மா காந்தி. வீரனும் தியாகியுமாவதற்குச் சிறைவாசம் எவ்வளவு சுலபமும் கச்சிதமும், பத்திரமும், சௌகரியமும் பெருமையும் வசதியுமான குறுக்குவழி!

அப்புறம், — எங்களுக்கு நடந்த பந்தோபஸ்தை அல்லவா சொல்ல வந்தேன்!

நாங்களாகத் தண்டனை பெறவே வந்திருக்கிறோம். ஓடியா போவோம்? ஏன் இவ்வளவு கெடுபிடி? இத்தனையோடாவது போச்சா? இரண்டு லாரி மலபார் ரிஸர்வ் போலீஸ் ஜவான்களை லாட்டி, துப்பாக்கி சகிதம் கொண்டு வந்து இறக்கியிருந்தார்கள். நாங்கள் சிறையிருந்த லைப் — ஜெயில் வராந்தாவில் 'லெப்ட்-ரைட்' போட்டுக் கொண்டு அவர்களில் பலர் அணிவகுத்துச் சுற்றிச் சுற்றி வந்தார்கள். மகா வலிமை பொருந்திய அந்த பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தை நாங்கள் நாலு பேரும் எப்படிக் கலக்கிவிட்டோம்! அதற்குத்தான் என்ன பயம் எங்களிடம்! இல்லையில்லை. உள்ளபடி அது



வல்ல. எங்களிடம் ஒரு பயமும் இல்லை அதற்கு.

நவீன ஆட்சிக் கலை வல்லவர்களில் ஆங்கிலேயருக்கு நிகரானவர், நமக்குத் தெரிந்தவருள் வேறு யாரும் இல்லை. இன்று நாம் ஆள்வதெல்லாம் அவர்கள் கற்றுக் கொடுத்த, பயிற்றுவித்த வித்தைதான். தங்கள் ஆட்சிக்கு மக்கள் அடங்கியிருக்கும்படி செய்யத் தேவையான பிரமைகளையெல்லாம் மக்களிடம் அவர்கள் உண்டாக்கி விடுவார்கள்; எதிர்பாராமல் நிகழத்தக்க விபரீதங்களையெல்லாம் சமாளிக்கத்தக்க முன் எச்சரிக்கை நடவடிக்கைகளை மேற்கொள்ளும் அனுபவமும் கைவந்தவர்கள். நான் சொன்னேனே அந்த இரண்டு மலபார் போலீஸ் ரிஸர்வ் ஜவான்களும் மேல் நோக்கிப் பிடித்த துப்பாக்கிகளுடன் தங்கள் லாரிகளில் காரைக்குடி நகரத்தை இரண்டு மூன்று முறை சுற்றினார்கள்; அப்படியே தேவகோட்டைக்குச் சென்று உச்சிப் பகலில் இரண்டொரு சுற்று அதே போல் சுற்றினார்கள்; மாலையில் இந்த விதமாகவே சிவகங்கைக்குப் போய்ச் சுற்றினார்கள். அந்த ஒரே நாளில் இந்த மூன்று நகரங்களிலும் ''எங்கே பார்த்தாலும் மலபார் போலீஸ்!'' என்று மக்கள் பேசிக் கொள்ளலானார்கள். மலபார் போலீஸ் ஜவான்கள் இந்த மாதிரி மூன்று நகர்களிலும் மக்களின் மனத்தில் சர்வ வியாபிகளாகி விட்டார்கள். இது மாத்திரமா? மக்களுக்குச் சற்றும் பழக்கமில்லாத புது முகங்களான மலபார் போலீஸைத் தமிழ் நாட்டுக்குக் கொண்டு வருவார்கள்; தமிழகப் போலீஸைப் பஞ்சாப்புக்குக் கொண்டு போவார்கள்; பஞ்சாப் போலீஸை வங்காளத்துக்குக் கொண்டு போவார்கள். வெவ்வேறு பிராந்திய முகத்தினரை, வெவ்வேறு பிராந்திய மொழியினரை அவர்களுக்குத் தொடர்பில்லாத இடங்களுக்கு இப்படிக் கொண்டு செல்வது இன்னொரு யுக்தி.



நாங்களோ, சிறு கோட்டை போன்ற ஸப்-ஜெயிலில் இருக்கிறோம். அதிலிருந்து தப்பியோடும் வலிமையோ, சாதனமோ சற்றும் எங்களிடம் இல்லை. அப்படிச் செய்யும் எண்ணமே லவலேசமும் எங்களுக்கில்லை. எனவே, அதற்கு அற்ப முயற்சியும் நாங்கள் செய்ய மாட்டோம். தவறிச் செய்தாலோ சிறு பயனும் கிட்டாது. தப்பித் தவறி ஓடினால் எங்களைத் தடுத்துப் பிடிக்க இவ்வளவு தடபுடலான முன்னெச்சரிக்கை தேவையில்லை. பின்னே, மக்களைப் பயமுறுத்துவதா அதிகாரிகளின் நோக்கம்? அதுவும் ஒரு நோக்கம் தான். ஆனால் அதைவிட முக்கியமான இன்னொரு நோக்கமும் உண்டு. நாங்கள் ஓட மாட்டோம், வாஸ்தவம். ஆனால் மக்கள் ஆர்த்தெழுந்து எங்களை வெளியேற்றிச் செல்லப் பலாத்காரச் செயல் புரிந்தால் அதைச் சமாளிக்க வேண்டாமா? பின்னாளில் அத்தகைய பல முறைகளை அந்தச் செட்டிமார் பிராந்தியத்திலேயே கண்டோம் இல்லையா?

எங்கள் ஸப் - ஜெயில் வாழ்வு, அரக்கிகளின் நடுவே சீதை சிறையிருந்தது போல் பயங்கரமாயில்லை. ஆயினும், 'சிப்பாயைக் கண்டஞ்சுவார்' என்று பாரதி பாடியதைப் போல், பொதுவாக அந்த நாளில் போலீஸ் மீது மக்களுக்கு ஒரு பயமும் குரோதமும் உண்டு. அந்த நாளில் என்ன? இந்த நாளிலும் கூடத்தான் அந்த நிலை பெரும்பாலும் இருந்து வருகிறது. குழந்தைகளை நம் தாய்மார்கள் வளர்க்கும் முறையே இதன் காரணம். ''இதோ பாரு, பிடிவாதம் பிடிச்சயோ, போலீஸ் ஜவான் வந்துவிடுவான்; பூச்சாண்டி பிடிச்சுண்டு போயிடுவான்'' என்று பிஞ்சு நெஞ்சுக் குழந்தைகளைப் பய



முறுத்துவது இன்றும் பெரியவர்களின் வழக்கமாயிருந்து வருகிறது. இது எவ்வளவு பெருந் தவறு என்று நாம் உணர்ந்தால்தானே! நாம் வளர்ந்த சூழ்நிலை காரணமாக, நமக்கே இந்தப் பயமும் வெறுப்பும் வயது முதிர்ந்த பின்னும் அடிமனத்தில் படிந்து கிடக்கிறது; அகல்வதில்லை. என்னையும் சேர்த்துத்தான் சொல்லுகிறேன்.

அதுவும் அந்தச் சுதந்திரப் போராட்ட நாளில் போலீஸை அந்நிய அரசின் கையாட்கள் என்றும், எதிரிகள் என்றும் மக்கள் எண்ணியிருந்தார்கள். அவர்களும் தம்மவரே என்ற எண்ணமே மக்களுக்கு இல்லை; தம்மைப் போன்ற மனிதர்களே என்ற எண்ணம்கூட இல்லை. செயலுக்கு எதிர் விளைவு உண்டு. போலீசாருக்கும் மக்களிடம் ஒரு பீதியும் அச்சமும் எதிர்

விளைவாக ஏற்படுகின்றன. அவர்களிடம் மக்களும், மக்களிடம் அவர்களும் தவறி நடக்கத் தொடங்கி விடுகிறார்கள். ஆனால், அன்று நாங்கள் ஓர் அதிசயத்தைக் கண்டோம். ராய. சொ. அவர்களும் நானும் ஏதோ பேசிக்கொண்டோ, எதையோ கவனித்துக் கொண்டோ இருந்தோம். மற்ற இரண்டு நண்பர்களும் இன்னொரு பக்கம் இதே போல் இருந்தார்கள்.

மலபார் போலீஸ் அணி 'மார்ச்' செய்த காலடி ஓசை மங்கியது.

''ஸார்! ஸார்!''

இப்படியொரு மெல்லிய குரல் கதவடியிலிருந்து எங்கள் பக்கம் கேட்டது.

நான் தலை நிமிர்ந்து பார்த்தேன்.

ஒரு போலீஸ் ஜவான். மலையாள இளைஞர். கதவோரமாய் நின்று கொண்டிருந்தார். கம்பிக் கதவா? கம்பிகளின் இடுக்கால் எங்களை உற்றுப் பார்த்தபடி நின்றார். அவருடைய விழிகளிலிருந்து கண்ணீர் தாரை தாரையாய்ப் பெருகிக் கொண்டிருந்தது. பேசவே திக்குமுக்காடினார்.

''என்ன? ஏன்?'' என்று நாங்கள் கேட்டோம்.

''என்ன ஸார்? என்ன ஸார்...? இப்படி.... இப்படி....'' என்றாரே அன்றி, மேலே ஒன்றும் பேச முடியாமல் பின்னும் கண்ணீர் விட்டார் ஜவான்.

மீண்டும் கேட்டபோது, அவர் கொஞ்சம் தம்மைத் திடப்படுத்திக் கொண்டு, ''நம் கையைக் கொண்டே நம் கண்களைக் குத்துவது போல, எங்களைக் கொண்டே உங்களை இப்படி அடக்குகிறானே!'' என்று கதறாத குறையாகச் சொன்னார் அந்த இளம் மலையாள ஜவான்.

நாங்களும் கண் கலங்கி விட்டோம். அவருக்கு ஏதோ ஆறுதல் சொன்னோம். அவரவருடைய நிலையில் எத்தனையோ சிக்கலுக்கு ஆட்பட்டு வாழ்க்கை நடத்த வேண்டியிருக்கிறது. எல்லாருக்கும் கடமை உண்டு. ஆனால் அது ஒரே விதமாயிராது. முனிவரின் தவவலிமையை மிஞ்சிய வலிமையைப் பத்தினி புரிந்த கணவரின் பணிவிடையிலும், கசாப்புக் கடைக்காரனின் பற்றற்ற வாணிகத் தர்மத்திலும் நம் இதிகாசம் காட்டுகிறதில்லையா? அந்த வாலிப ஜவானின் பரிசுத்த உள்ளத்திலே கண்ட தேசபக்தி எங்கள் மனம் நெகிழச் செய்தது. அவர் மேல் ஒரு தவறுமில்லை என்று சொல்லி அவரை நாங்கள் சமாதானப்படுத்தி அனுப்பி வைத்தோம்.

பின்பு எங்களை ஸப்-மாஜிஸ்திரேட்டின் முன்பு கொண்டு போய் நிறுத்தினார்கள்.

வழக்கப்படி பிராஸிக்யூஷன் தரப்பு விசாரணைச் சடங்கு நடந்து முடிந்தது.

''நீங்கள் குற்றவாளியா, குற்றவாளி இல்லையா?''

''குற்றவாளியே.''

இது காந்தி சொல்லிக் கொடுத்த பதில்தான்.

நாலுபேருக்கு ஓராண்டுக் கடுங்காவல் தண்டனை விதித்தார் ஸப் - மாஜிஸ்திரேட்.

எல்லாம் உதவிக் கலெக்டர் உத்தரவுப்படியே நடந்தது. உதவிக் கலெக்டர் அந்தக் கோர்ட் காம்பவுண்டின் ஒரு பக்கமாகக் காரில் அமர்ந்தபடியே எல்லா நடவடிக்கைகளையும் கவனித்து நடத்தி வைத்துக் கொண்டிருந்தார். சற்று ஒதுங்கி ஒரு பெருங் கூட்டமாய்த் திரளான மக்கள் நின்று கொண்டிருந்தார்கள்.

நட்ட நடுவே திறந்த போலீஸ் லாரி ஒன்று வந்து நின்றது. எங்களை மதுரைச் சிறைக்குக் கொண்டு செல்லவே அது வந்தது.

லாரியின் அருகே எங்களைக் கொண்டு போய் நிறுத்தினார்கள். போலீஸ் ஸப்-இன்ஸ்பெக்டரும் சில ஜவான்களும் மேலதிகாரிகளும் கூட இருந்தார்கள். ஸர்க்கிள் இன்ஸ்பெக்டரோ ஸப் — இன்ஸ்பெக்டரோ, அவர் யார் என்று எனக்கு நினைவில்லை. இரண்டு கைவிலங்குகளை வைத்துக் கொண்டு எங்கள் கிட்டே வந்து நின்றார். கண் கலங்கியபடி, உதவிக் கலெக்டரை அவர் பார்த்தார். உதவிக் கலெக்டர் மிக மிடுக்காக, 'ஆகட்டும், ஆகட்டும்' என்ற தோரணையில் தலையை அசைத்தார். 'வேண்டாமே' என்ற பாவனையில், இன்ஸ்பெக்டர் தலையசைத்தார். எங்களுக்கு விலங்கு பூட்டுவது சம்பந்தமாகத்தான் இந்தத் தலையசைப்பு, ஜாடை பாஷை. இறுதியில் உதவிக் கலெக்டரின் பிடிவாதத்துக்குப் போலீஸ் இன்ஸ்பெக்டர் பணிய வேண்டியதாயிற்று. எனது வலது கையையும், ராய. சொ.வின் இடது கையையும் சேர்த்து ஒரு விலங்கையும் மற்ற இருவரின் வலது இடது கைகளைச் சேர்த்து மற்றொரு விலங்கையும் மனம் இல்லாமலே இன்ஸ்பெக்டர் பூட்டி விட்டார். பிறகு எங்களை லாரியில் ஏற்றி விட்டார்கள். லாரி பறந்தது. தாவள்யமான வெண்ணிலவு வீசியது. விலங்கு பூட்டியிருந்த கையின் வலியால் ராய. சொ.வும் நானும் சிரமப்பட்டதைக் கண்டார் அந்தக் கறுப்புக் குல்லாய் நண்பர். தம் நண்பரைப் பிணைத்திருந்த விலங்கு வளையத்தை எப்படியோ அகற்றித் தம் கையை அவர் விடுவித்துக் கொண்டிருந்தார். எங்களிலும் ஒருவரை எங்கள் விலங்கிலிருந்து அதேபோல் விடுவித்து விட்டார்.

மக்களின் சத்துருக்கள், பாரதத்தை அடிமைப்படுத்தியிருந்த அன்னியரின் கையாட்கள் என்று பொதுவாய் மக்கள் மதித்திருந்த போலீஸ் உள்ளங்களிலே தூய தேசாபிமானத்தை அன்று நாங்கள் கண்டோம். எங்கள் தேசபக்திக்கு எந்த விதத்திலும் அவர்களுடைய தேசபக்தி தாழ்ந்ததல்ல, மாற்றுக் குறைந்ததல்ல என்ற எண்ணம் என் மனத்திலே, ஆழ்ந்து பதிந்தது. பாரதத்தின் பொன் மயமான எதிர்காலக் கோபுரம் அத்தகைய எத்தனையோ தூய உள்ளங்களிலே அன்று எழுந்ததை என் கற்பனையிலே கண்டேன். என் மனத்தை விட்டகலாது நிலைப்பட்ட அந்த நாள் எப்படி மறையும்? அது அழியாத நாள்.

WIDENING WORLD OF GENERAL INSURANCE

NEW INDIA MEANS BEST IN INSURANCE SERVICE
THAT IS READILY AVAILABLE TO YOU
THE FIFTY-YEAR TRADITION OF NEW INDIA'S
EFFICIENT SERVICE WITH SECURITY
IS BEING CARRIED ON TODAY ON A WORLD WIDE SCALE

THE MOST PROGRESSIVE NAME IN GENERAL INSURANCE

IN 1970 NEW INDIA ENTERED IT'S 51st YEAR
AND
REDEDICATES ITSELF TO THE SERVICE OF ITS CLIENTS

** ** ** ** **

## The New India Assurance Company Ltd.

87, Mahatma Gandhi Road
BOMBAY-1

---

## பொங்கல் விசேஷ விற்பனை!

ஆராதனா செக்ஸ், எக்ஸ்போ ஸ்ட்ரைப்ஸ் பட்டுச் சேலைகள்!

ஈடு இணையற்ற பட்டு சேலைகளுக்கு




## நல்லி சில்க்ஸ்
## பட்டு சேலைகள்

82, ராயப்பேட்டை ஹை ரோட்,
லஸ் • மயிலாப்பூர் (போன்: 74862) சென்னை-4

10—1—1971 ஞாயிறன்று விற்பனை உண்டு.




என் அன்புள்ள ராஜா,

நாமும் தம்பதியாகி விட்ட இந்த ஆறு வார காலத்தில் நீங்கள்எனக்கு எழுதிய கார்டு கவர்களை வைத்து நான் நமக்குத் தேவையான 'மாடல்' வீடு ஒன்றே கட்டிவிட்டேன். ஜப்பான் அட்டை வீடு மாதிரி! நீங்கள் இன்னும் அந்தச் 'சென்னை மாநகரில்' நமக்கு இடம் தேடி அலைந்து கொண்டிருக்கிறீர்கள். அந்தோ பரிதாபம்; நான் எத்தனையோ மனக் கோட்டைகளைக் கட்டிக் கொண்டு வருகிறேன். அவை யெல்லாம் 'டு லெட்' போர்டு இல்லாமல் காலியாக இருக்கின்றன. ஆனால் இன்னும் உங்கள் கண்ணுக்கு அங்கே ஒரு 'டுலெட்' போர்டு கூடத் தென்படவில்லை போலும்!

என் அம்மா ஆதங்கத்துடன் கேட்டாள்: ''ஏன் பவானி! மாப்பிள்ளையை வீடு பார்க்கச் சொன்னாயா, இல்லை புது வீடு வாங்கச் சொன்னாயா? ஒருவேளை நீ சொன்னது சரியாகக் காதில் விழாததால் 'வீடு வாங்கும் படலத்தில் இறங்கிவிட்டாரோ'' என்று அங்கலாய்க்கிறாள். அண்ணாவோ, என்னை ''வீடு வீடு என்று அவரை விரட்டி விரட்டி, ஓய்வு இல்லாமல் செய்து படுக்கையில் போடப் போகிறாய்'' என்று மிரட்டுகிறார். 'இங்கிருந்து நான் எப்போது நகருவேன்' என்று எதிர் பார்த்திருந்த அண்ணாவுக்கே உங்கள் விஷயத்தில் இத்தனை கரிசனம்!

இவ்வாறாக இந்த அசோகவனத்தில் அடியேன் இருந்து கொண்டிருந்தும் இன்னமும் பாராமுகமாக எனக்கு ஏதோ ஆறுதல் வார்த்தைகள் கூறி, அழுகிற குழந்தைக்கு வாழைப் பழம் கொடுக்கிறீர்கள்!

எதிர் வீட்டு ஹேமலதாவைக் கல்யாணம் முடிந்த மறுநாள் அவர் கணவர் கையோடு விமானத்தில் கான்பெராவுக்கு அழைத்துக் கொண்டு போய்விட்டதைக் குத்திக் காட்டி எங்கள் வீதியே என்னைச் சித்திரவதை செய்கிறது. 'இங்கிருக்கிற மதராஸுக்கு இந்தத் தஞ்சாவூரிலிருந்து கிளம்ப இத்தனை தாமதமா?' என்கிறார்கள் இந்தோனமும், பஹாரியும் கேட்டு மகிழும் ரசிகர் நீங்கள். என் முகாரி உங்களுக்குப் பிடிக்குமா?

மதராஸில் எங்கே வீடு பார்த்திருக்கிறீர்கள்? என்னைக் கொண்டு போய் மூலக் கொத்தளத்திலோ, ஆயிரம் விளக்கடியிலோ, புளியந்தோப்பிலோ நிறுத்தி வேடிக்கை பார்க்காதீர்கள். 'இத்தனை பெரிய மதராஸில் இங்குதான் இடம் கிடைத்ததா?' என்று கேட்கப் போகிறார்கள். அதற்காக அடையாறு பங்களாவுக்கு நான் ஆசைப் படவில்லை. மயிலாப்பூர், மாம்பலம் என்று இல்லையா...? என் சித்தப்பா இருந்த 1930ம் வருட திருவல்லிக்கேணி 'அந்தகார பங்களா பக்கம்' போய்விடாதீர்கள். பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தில் சூரியன் அஸ்தமிக்காது என்று எப்போதோ என் அண்ணா படிப்பான். அதுபோல் அந்த அந்தகார பங்களாவில் சூரியன் எப்போதும் உதித்ததே இல்லை. ஆகவே வீடு தேடுவதில் சற்று ஜரூராக இருங்கள். ஏமாந்துவிடாதீர்கள்! என்னையும் ஏமாற்றி விடாதீர்கள்.

நாம் இரண்டு பேர்தானே! குழந்தையா, குட்டியா? ஏதோ ஒரு ஐம்பது ரூபாயில் ஓர் அழகான — வசதியான — காற்றோட்டமான நல்லமாதிரியான வீட்டுக்காரருடன் — ஆபீசுக்கும் பக்கமாக ஒரு வீடு ஏன் பார்க்கக்கூடாது? இனி என்னால் இப்படி போஸ்ட்மேனை எதிர் பார்த்துத் தவமிருந்து துடிதுடிக்க முடியாது. பகல் எக்ஸ்பிரஸ் ஏறி இந்தப் பவானி அந்த மதராஸில் உங்கள் முன் வந்து நிற்பாள். உங்களோடு சேர்ந்து வீடும் தேடுவாள்! ஹோட்டல் சாப்பாட்டுக்கும் வருவாள்! ஆகவே சால்ஜாப்புச் சொன்னது போதும். உடனே வீடு... அடேடே... தபால்காரர் ஏதோ கவரை வீசி எறிந்துவிட்டுப் போகிறாரே... என்னவென்று பார்க்கிறேன்....

(இந்தக் கடிதம் எழுதி முடிக்கும்போது உங்களிடமிருந்து புதுக் கடிதம் ஒன்று முளைத்து வரவே ஆவலோடு பிரித்துப் படித்தேன்.)

இதென்ன கஷ்ட காலம்! ஈசுவரா! ஜகதீசா! கண்ணாடிப் பிள்ளையாரே! மகமாயி! இதென்ன வேலை! ஆசையாக மதராஸ் போகலாம், இந்தச் செம்புழுதித் தஞ்சாவூரைவிட்டு நகரலாம் என்று மனக் கோட்டை கட்டினேன். நீங்கள் உங்கள் தஞ்சாவூர் கிளைக் காரியாலயத்துக்கு எதற்காக இப்படி 'டிரான்ஸ்பர்' வாங்கிக் கொண்டீர்கள்? என்னைப் பழி வாங்கவா? இனித் தஞ்சாவூரில் தனிக் குடித்தனத்துக்கு நான் இடம் தேடியாக வேண்டுமா? சந்துக்களுக்குப் பெயர் போன இந்த சரபோஜி மன்னன் நலைநகரில் இனி நான் எந்த மூலைக்கெல்லாம் வீடு தேடி அலைவேன்? ஹே! அம்பிகே! தங்கக் காமாட்சி! அவரை வீடு தேடச் சொல்லி விரட்டியதற்குக் கைமேல் பலனா இது? எந்த ரயிலில் இங்கு பெட்டிபடுக்கையோடு வந்து குதித்து என்னை வீடு தேடச் சொல்லி விரட்டுவீர்களோ! என் ராஜா!... சரி, சரி வந்து சேருங்கள்! எங்கள் வீட்டு மொட்டைமாடியில் 'ஆஸ்பெஸ்டாஸ்' ஷீட்டு போட்டுக் கொண்டு கொஞ்ச காலம் தனிக் குடித்தனம் நடத்திப் பார்ப்போம்.... வேறு வழி? ஆயிரம் விளக்கோ, புளியந்தோப்போ, மூலக்கொத்தளமோ இனி ஏது வாக இருந்தால் என்ன?

- இப்படிக்கு உங்கள் மனைவி பவானி.

# சினிமாக் கல்யாணம்



காட்சி 1

(ஒரு ஸ்டூடியோவில் கல்யாணக் காட்சி படமாக எடுக்கப்பட்டுக் கொண்டிருக்கிறது. டைரக்டர் (இவரேதான் படாதிபதி) தாலியை ஒரு தட்டில் வைத்து, எல்லாரிடமும் ஆசிர்வாதத்தைப் பெற்றுக் கொண்டிருக்கிறார். மணையில் மாப்பிள்ளை, அதாவது நடிகர் ஷங்கர் மாத்திரம் காணப்படுகிறார். மந்திரம் சொல்லிக் கொண்டிருக்கும் சாஸ்திரிகள் தம் கைக் கடியாரத்தைப் பார்க்கிறார்.)

சாஸ்திரிகள் : முகூர்த்த டயம் போய்விடப் போறது. பெண்ணை வரச் சொல்லுங்கள், பெண்ணை வரச் சொல்லுங்கள்.

டைரக்டர் : பெண்ணை வரச் சொல்லுங்கள், பெண்ணை வரச் சொல்லுங்கள்.

(நடிகை ஜயஸ்ரீயை யாரோ ஒரு பெண் அழைத்துக்கொண்டு வர, அவள் மணைக்குச் சென்று, நமஸ்காரம் பண்ணி விட்டு உட்காருகிறாள். சாஸ்திரிகள் இரண்டு நிமிஷ நேரம் மந்திரம் சொல்லுகிறார்.)

சாஸ்திரிகள் (கையை உயர்த்தி): கெட்டி மேளம், கெட்டி மேளம்!

டைரக்டர் (கையை உயர்த்தி) : கெட்டிமேளம், கெட்டி மேளம்!

இன்னொருவர் (கையை உயர்த்தி): கெட்டி மேளம், கெட்டி மேளம்!

ஷங்கர் (கையை உயர்த்தி): கெட்டி... கெட்டி மேளம், கெட்டி மேளம்!

டைரக்டர் : மாப்பிள்ளை ஸார்! நீங்க உங்க காரியத்தைப் பாருங்கோ! கெட்டி மேளத்தை நாங்கள் கவனிச்சிக்கிறோம்! (கையை உயர்த்தி) கெட்டி மேளம், கெட்டி மேளம்!

(கெட்டி மேளம் ஒலிக்கிறது. மாப்பிள்ளை தாலியைக் கட்டுகிறார். பெண்கள் கௌரி கல்யாணம் பாடுகிறார்கள்.)

டைரக்டர் : கட், கட், கட்!

(காமிராமேன் உள்ளேயிருந்து வருகிறார்.)

காமிரா மேன் : என்ன ஸார், அதற்குள் கட் பண்ணச் சொல்லி விட்டீர்கள்! இன்னும் நூறு அடி எடுக்கலாம் என்று பார்த்தேன்.

ஷங்கர் : (எழுந்து மாலையைக் கழற்றி வைத்துவிட்டு) என்ன டைரக்டர் ஸார்! இன்று படப் பிடிப்பு இவ்வளவுதானே! நான் போகலாமா?

டைரக்டர் : நீங்கள் போகலாம். ஆனால் நாளை ஷூட்டிங் காலை 8 மணிக்கு என்பது ஞாபகம் இருக்கட்டும்.

(ஷங்கர் புறப்படுகிறார்.)

டைரக்டர் : அடடா! ஷங்கர், ஷங்கர்!

ஷங்கர் : என்ன ஸார்?

டைரக்டர் : என்ன காமிரா மேன்! தாலி முடிவதை 'குளோஸ்-அப்' எடுக்க மறந்து விட்டீர்களே!

காமிரா மேன் : ஆமாம், ஸார். மறந்து தான் விட்டேன். இப்பொழுது எடுத்தால் போச்சு!

(காமிராமேன் காமிராவையும் விளக்குகளையும் சரிப்படுத்துகிறார்.)

டைரக்டர் : சரி ஷூட்!... அடடா! மாப்பிள்ளையின் கழுத்தில் மாலையைக் காணுமே! ஷங்கர்! மாலையை மாட்டிக் கொள்ளுங்கள்!

காமிராமேன் : மாலை யெல்லாம் உதிர்ந்து விட்டதே! இதற்குத்தான் நிஜ மாலை வேண்டாம், பேப்பர் மாலை போதும் என்று சொன்னேன். நீங்கள் கேட்கவில்லை.

டைரக்டர் : என்ன காமிரா மேன்! நான் இந்தக் கல்



யாணக் காட்சியை இத்தனை தத்ரூபமாக எடுப்பதற்குக் காரணம் சொன்னேனே! நாளைக்கு என் படம் டப்பாவானாலும், இந்தக் கல்யாணக் காட்சி டப்பாவாகாது. இதை நான் ஒரு டாக்குமெண்டரியாக விற்றுவிட முடியும். சரி, உதிர்ந்த மாலையாக இருந்தாலும் பரவாயில்லை, ஷூட் பண்ணுங்கள். ஜனங்கள் கவனிக்க மாட்டார்கள். சரி, ஷங்கர் 'குளோஸ் - அப்'புக்காகக் கட்டின அந்தத் தாலியை மீண்டும் அவிழ்த்துக் கட்டுங்கள்!

(இதைக் கேட்டு ஜயஸ்ரீ சீறி எழுகிறாள்.)

ஜயஸ்ரீ : என்ன, கட்டின தாலியை அவிழ்க்கிறதா? அதுவும் கட்டினவரே அவிழ்க்கிறதா? சாஸ்திரிகளே! நீங்களே சொல்லுங்கள்! இப்படி நீங்கள் எங்கேயாவது கேள்விப்பட்டிருக்கிறீர்களா?

சாஸ்திரிகள் : கட்டின தாலியை அவிழ்க்க யாருக்குமே உரிமை கிடையாது அம்மா! அந்தக் கணவனுக்குக்கூடக் கட்டத்தான் உரிமை உண்டே தவிர, அவிழ்க்க உரிமை கிடையாது, அம்மா!

டைரக்டர் (பக்கத்தில் நிற்கும் வசனகர்த்தாவைப் பார்த்து): என்ன எழுத்தாளர் ஸார்! இதெல்லாம் 'ஸ்கிரிப்ட்'டில் இருக்கா?

ஜயஸ்ரீ : இப்பொழுது நான் சொன்னது உங்கள் சினிமா ஸ்கிரிப்ட்டிலும் இல்லை, இது நான் நடிப்புக்காகச் சொன்னதும் இல்லை. இது நானே என் உள்ளத்தின் ஆழத்திலிருந்து சொன்ன வார்த்தைகள். என் கழுத்தில் ஏறிய தாலியை நான் இனி யாரையும் அவிழ்க்க விட மாட்டேன். அக்கினி சாட்சியாக இதை என் கழுத்தில் கட்டிய ஷங்கர் தான் இனி என் கணவர்.

டைரக்டர் : என்ன ஜயஸ்ரீ! என்னம்மா தமாஷ் பண்ணறே? 'குளோஸ்-அப்' ஷாட்டுக்கு நாழியாகிறது.

ஜயஸ்ரீ : டைரக்டர் ஸார்! தயவுசெய்து என்னை மன்னிக்க வேண்டும்.



டைரக்டர் (ஜயஸ்ரீயின் தகப்பனாரைப் பார்த்து): என்ன ஸார்! உங்கள் பெண்ணுக்கு நீங்களே சொல்லுங்கள்!

தகப்பனார் : என்னம்மா ஜயஸ்ரீ! டைரக்டர் சொன்னபடி கேளம்மா! சினிமாக் கல்யாணத்தைப் போய் நிஜக் கல்யாணம்னு வாதிக்கிறாயே!

ஜயஸ்ரீ : அப்பா! இது உங்களுக்கு சினிமாக் கல்யாணமாக இருக்கலாம். ஆனால் என் வரையில் இது நிஜக் கல்யாணம்தான். (ஷங்கரைப்பார்த்து) வாருங்கள், நாம் போகலாம்!

ஷங்கர் : எங்கே?

ஜயஸ்ரீ : எங்கா? நம் வீட்டுக்குத்தான்.

ஷங்கர் : இதோ பார் ஜயஸ்ரீ! இந்தக் கல்யாணத்தை நிஜக் கல்யாணம் என்று ஒப்புக்கொள்ள நான் தயாராக இல்லை.

ஜயஸ்ரீ : என்ன சாஸ்திரிகளே! நீங்கள் சொன்னவை எல்லாம் நிஜமந்திரங்கள்தானே?

சாஸ்திரிகள் : அதுதான் டைரக்டர் ஸார் கல்யாணக் காட்சி தத்ரூபமாக இருக்கவேண்டும் என்று நிஜக் கல்யாணம் எப்படி நடக்குமோ, அப்படியே நடத்தி வைக்கச் சொல்லி விட்டாரே!... சரி, என்ன டைரக்டர்வாள்! நான் போகலாமா? ஆமாம், இன்னும் வாத்தியார் சம்பாவனை கொடுக்கலையே!

டைரக்டர் : நான் அனுப்பி வைக்கிறேன், போங்கோ!

### காட்சி 2

(ஓர் அறைக்கு வெளியே, "ராமன் அண்டு ராமன், வக்கீல்கள்" என்று ஓர் அறிவிப்புப் பலகை காணப்படுகிறது. வக்கீல் கோதண்டராமன், வக்கீல் கல்யாணராமன், ஜயஸ்ரீ மூவரும் காணப்படுகிறார்கள்.)

கோ. ராமன் : என்னம்மா, நீ சொல்றது வேடிக்கையா யிருக்கே!

க. ராமன்: சினிமாக் கல்யாணத்தைப் போய்....

கோ. ராமன் : நிஜக் கல்யாணம்னு வாதாடறயே!

க. ராமன் : இது கோர்ட்டிலே நிற்காது அம்மா.

கோ. ராமன் : அப்படியே புஸ்ஸென்று பறந்துவிடும்.

க. ராமன் : நடந்த கல்யாணத்தை வேண்டுமானால் நடக்கலேன்னு எங்களால் வாதாட முடியும்.

க. ராமன் : ஆனால் நடக்காத கல்யாணத்தை....

கோ. ராமன்: எங்களால் நடந்ததாக 'ப்ரூவ்' பண்ண முடியாது.

ஜயஸ்ரீ : இதோ பாருங்கள். என்னால் நீங்க கேட்கும் பணத்தைக் கொடுக்க முடியும்.

கோ. ராமன் : பணம் கொடுக்க முடியுமா? அதை முன்னாலே சொல்வதற்கென்ன? நூறு ரூபாய் கொடுக்க முடியுமா?

ஜயஸ்ரீ : முடியும்.

க. ராமன் : இருநூறு ரூபாய்?

கோ. ராமன் : முந்நூறு ரூபாய்?

க. ராமன் : நானூறு?

கோ. ராமன் : ஐந்நூறு?

க. ராமன் : அறுநூறு?

கோ. ராமன் : எழுநூறு?

க. ராமன் : எண்ணூறு?

கோ. ராமன் : தொள்ளாயிரம்?

க. ராமன் . ஆயிரம்?

ஜயஸ்ரீ : ஆயிரம் ஒரு தடவை, ஆயிரம் இரண்டு தடவை, ஆயிரம் மூன்று தடவை. யார் ஆயிரம் சொன்னது? எடுங்கள் ரூபாயை!

கோ. ராமன் : என்னம்மா, கடைசியில் எங்களை ஏலம் கேட்க விட்டுட்டே?

ஜயஸ்ரீ : பின் நீங்கள் ஏலம் மாதிரி தொகையை உயர்த்திக் கொண்டே போனால்? இந்தாருங்கள் கேட்ட ஆயிரம் ரூபாய்.

க. ராமன் : சரி! நீ கவலைப்படாதே. எத்தனை வருடங்களானாலும் சரி, உன் சினிமாக் கல்யாணம் நிஜக் கல்யாணம்தான் என்று நிரூபிக்கிறோம். ஆனால் அவ்வப்பொழுது நாங்கள் கேட்கும்போதெல்லாம் நீ பீஸ் கொடுத்துக் கொண்டே யிருக்க வேண்டும், தெரிந்ததா?

## காட்சி 3

(ஷங்கரின் அறை. ஏதோ கசரத்து செய்வது போல ஷங்கர் ஓடியாடிக் கொண்டிருக்கிறார். எழுத்தாளர் கோபால் வருகிறார்.)

கோபால் : என்ன ஷங்கர்! நானைக்கு ஏதாவது குஸ்திச் சண்டையா?

ஷங்கர் : டேய் இடியட்! நீ தமிழ்ப் படம் பார்க்கிறதேயில்லையா?

கோபால் : தினம் இந்தத் தமிழ் சினிமாக்களைப் பார்த்து அவற்றைப் பற்றி எழுதுறதுதானே எனக்கு வேலை!

ஷங்கர் : அப்படி யிருக்க நான் செய்து கொண்டிருப்பது குஸ்திப் பயிற்சி என்கிறாயே! நாளைக்கு ஸ்டுடியோவில் காதல் காட்சி ஷூட்டிங். அதற்குத்தான் பயிற்சி செய்துகொண்டிருக்கிறேன்.

(தபால்காரர் ஒரு ரிஜிஸ்தர் கடிதம் கொண்டு வந்து கொடுக்கிறார். அதைப் படித்ததும் ஷங்கரின் முகம் மாறுகிறது.)

ஷங்கர் : என்ன அயோக்கியத்தனமாக இருக்கிறது! ராமன் அண்டு ராமன் எனக்கு வக்கீல் நோட்டீஸ் அனுப்பி யிருக்கிறார்களே!

கோபால் : எதற்காக நோட்டீஸ்? என்னவென்றுதான் படியேன்!

ஷங்கர் : படிக்கிறார்:

ஐயா,

எங்கள் கட்சிக்காரியாகிய ஸ்ரீமதி ஜயஸ்ரீயைத் தாங்கள் பலர் முன்னிலையில், இந்து விவாக விதிகளின்படி அக்னி சாட்சியாகத் திருமணம் செய்து கொண்டுவிட்டு, இப்பொழுது அவரை மனைவியாக ஏற்றுக் கொள்ள மறுக்கிறீர்களாம் !

இந்த நோட்டீஸ் கிடைத்த ஒரு வாரத்துக்குள் தாங்கள் அவளை மனைவியாக ஏற்றுக் கொள்வதுடன், இந்த நோட்டீஸ் அனுப்புவதற்கு ஏற்பட்ட செலவையும் எங்கள் கட்சிக்காரி எங்களுக்குப் பீசாகக் கொடுத்த ஆயிரம் ரூபாயையும் உடனே அனுப்பி வைக்கா விட்டால் உங்கள்மீது வழக்குத் தொடரப்படும் என்பதை அறியவும்.''

(படித்து முடிக்கிறார்.)

இது என்ன அயோக்கியத்தனமாக இருக்கிறது! நான் உடனே இந்த வக்கீல்களைப் பார்த்துவிட்டுத்தான் மறு காரியம்.

கோபால் : இவர்களைப் பார்த்து என்ன பிரயோசனம்? வக்கீல் சாரி இருக்கிறார். அவரைப் பார்த்து எதிர் வழக்காட ஏற்பாடுசெய்.

ஷங்கர் : ஆம், அப்படித்தான் செய்ய வேண்டும்.

## காட்சி 4

(ஸ்டுடியோ டைரக்டரும், ஜயஸ்ரீயும்.)

டைரக்டர் : என்னம்மா, என்ன சொல்லியும் கேட்காமல், நீ ஷங்கர் மீது வழக்குத்



## வருந்துகிறோம்

புதுக்கோட்டையில் கல்வி சுயராஜ்யா ஏஜண்டாகப் பணியாற்றிவந்த **ஸ்ரீ எம். எஸ். சுப்ரமணிய அய்யர்** சென்ற 2-12-70 அன்று காலமானார் என்பதை மிகவும் வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறோம். அன்னாரது குடும்பத்தினர் அனைவருக்கும் நமது ஆழ்ந்த அனுதாபங்கள். அவருடைய ஆன்மா சாந்தி அடைய எல்லாம்வல்ல இறைவனைப் பிரார்த்திக்கிறோம்.

## அஞ்சலி



ஆறு ஆண்டுகள் ஓடி மறைந்தும் அவர் அன்பு உள்ளமும், இனிய பண்பும் புனிதமான நினைவுகளாய் உயிர்த்துடிப்போடு நிறைந்து நிற்கின்றன. 18-12-70 அவர் நினைவு நாள். அது எங்கள் நினைவில் என்றும் பசுமையாயிருக்கும் நாள். மதிப்புக்குரிய எங்கள் தந்தையார் **திரு வி. சுப்பையா முதலியார்** இறைவன் திருவடியை அடைந்து விட்டாலும் அவர் என்றும் எங்கள் நினைவிலேயே இருப்பார்.

பணிவன்பு கலந்த எங்கள் மனப்பூர்வமான அஞ்சலியை அன்புத் தந்தைக்குத் தெரிவித்துக் கொள்கிறோம்.

எஸ். வையாபுரி. B. E., சென்னை
எஸ். ராஜசேகரன், பெங்களூர்

தொடுத்து விட்டாயே! எனக்குக் கவலையாக இருக்கிறதே!

ஜயஸ்ரீ : நீங்கள் எதற்குக் கவலைப்படு கிறீர்கள் என்பதைச் சற்று விரிவாகத்தான் சொல்லுங்களேன்!

டைரக்டர் : இல்லேம்மா. நம் படக் கதை யில் கடைசிக் காட்சிதான் கல்யாணம். இது என் முதல் படமாக இருப்பதால் சுபமாக இருக்கட்டுமே என்று கலியாணக் காட்சியை முதலில் எடுத்தேன். இனிமேல்தான் காதல் காட்சிகளையெல்லாம் படம் எடுக்கவேண்டும். நீ ஷங்கரோடு கோபித்துக் கொண்டு இருக் கிறாயே, எப்படிக் காதல் காட்சிகளில் நடிக்கப் போகிறாய் என்றுதான்—

ஜயஸ்ரீ : அதைப் பற்றி நீங்கள் கவலைப் படாதீர்கள், ஸார்! நான் எப்பொழுது அவ ரைக் கணவராக என் மனத்தில் கொண்டு விட்டேனோ, காதல் காட்சிகளை நீங்கள் எத் தனை நெருங்கி நடிக்க வேண்டும் என்று எதிர் பார்க்கிறீர்களோ, அதைவிட அதிக நெருக்க மாக நடிப்பேன்.

டைரக்டர் : அப்படியானால் என் கவலை விட்டது. ஆமாம், பத்திரிகைகள் எல்லாம் உன் வழக்கைப் பற்றி விடாமல் எழுத ஆரம் பித்திருக்கின்றனவே, பார்த்தாயா?

ஜயஸ்ரீ : பார்த்தேன். ஆனால் என் சொந்த விஷயத்தைப் பற்றிப் பத்திரிகைகள் ஏன் இத்தனை அக்கறை எடுத்துக் கொள்ள வேண் டும் என்பதுதான் புரியவில்லை.

டைரக்டர் : சினிமா நடிகைக்கு ஏது சொந்த விஷயம்? அவள் செய்யும் எல்லாக் காரியங்களும் பொது விஷயங்கள்தாம்.

(தபால்காரர் ஒரு கட்டுக் காகிதங்களை ஜயஸ்ரீயிடம் கொண்டுவந்து கொடுக்கிறார்.)

ஜயஸ்ரீ: இத்தனை கடிதங்களா?

(பிரித்துப் படிக்கிறாள்.)

"பெண்ணின் உரிமைக்காகப் போராடும் உங்களை நான் பாராட்டுகிறேன். இத்துடன் ரூபாய் நூறு வைத்திருக்கிறேன். வழக்கின் செலவுக்கு வைத்துக் கொள்ளவும். வழக்கு முடியும்வரை இதே மாதிரி வாரம் நூறு ரூபாய் அனுப்பிக்கொண்டிருப்பேன். வழக் கைத் தொடர்ந்து நடத்தி அந்த ஷங்கரை உங்கள் காலில் விழச் செய்யுங்கள்!"

ஐயோ! அவர் எதற்காக என் காலில் விழ வேண்டும்! அவர் காலில் விழும் பாக்கியம் எனக்குக் கிடைக்க வேண்டும் என்பதற்காக அல்லவா நான் வாதாடிக் கொண்டிருக் கிறேன்.

(மற்ற கடிதங்களையும் பிரித்துப் பார்க்கிறாள்.)

இன்னும் ஒன்பது பேர் ஆளுக்கு நூறு ரூபாய் அனுப்பி யிருக்கிறார்களே! எல்லோருமே வழக்கு முடியும்வரை தொடர்ந்து வாரம் நூறு ரூபாய் அனுப்பப் போவதாக எழுதி யிருக்கிறார்களே!

டைரக்டர் : ரொம்ப நல்லதாப் போச்சு! தொடர்ந்து வழக்காடு, விடாதே!

## காட்சி 5

(ஷங்கரின் வீடு. ஷங்கரும், கோபாலும்.)

கோபால் : என்ன ஷங்கர்! வழக்கு ஆரம் பித்து ஆறு மாதங்களாகியும் இன்னும் வழக்கு



## சுதந்திர தாகம்

ஹாங்காங் போலிஸார் சென்ற நவம்பர் மாதம் முதல் இரண்டு வாரங்களில் மட்டும் கடலோரங்களில் கண்டெடுத்த பிரேதங்கள் நாற்பத்து மூன்று!

சூறாவளி வீசி இவர்களைப் பலிகொண்டுவிடவில்லை. கம்யூனிஸ்ட் சிறையிலிருந்து தப்பிச் சுதந்திர வாழ்வு பெற ஹாங்காங்குக்கு ஓடி வந்தவர்களில் பலரது சோகக் கதை இதுவே.

சுதந்திரக் காற்றைச் சுவாசிக்க ஆசை கொண்டு கடலில் நீந்தித் தப்ப முயலுபவர்களில் சிலரே வெற்றி பெறுகிறார்கள். பலர் எல்லைக் காவல் புரியும் சீன கம்யூனிஸ்ட் போலீஸாரின் குண்டுகளுக்கோ கடலின் உக்கிரத்துக்கோ பலியாகிறார்கள்.

இதோ ஓர் உண்மைக் கதை :

கடற்கரையில் ஓர் இளம் பெண் ஹாங்காங் போலீ ஸாரிடம் தன் காதலனுடன் சரணடைந்தாள். கடலை நீந்தும்போது பாதி வழியில் காதலன் களைத்துப் போகவே அவனையும் தான் இழுத்துக் கொண்டே நீந்தி வந்ததாகச் சொன்னாள்.

சுதந்திர மண்ணை மிதித்ததில் அவளுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சி கடுந் துயராக மாறியது. போலீஸார் அவள் காதலன் இறந்து நீண்ட நேரமாகிவிட்டது என்பதைச் சுட்டிக் காட்டியபோது! 'டெய்லி நியூஸ்'

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

கோர்ட்டுக்கு வரவில்லையே! இரண்டு பக்க வக்கீல்களும் ஒன்றுசேர்ந்து பேசிக்கொண்டு வாய்தா வாங்கிக்கொண்டேயிருக்கிறார்களே!

ஷங்கர் : அதைப் பற்றி நான் கவலைப்பட வில்லை. ஆனால் இந்தப் பத்திரிகைக்காரர்கள் வாரா வாரம் விடாமல் எங்களைப் பற்றி எழுதிக் கொண்டே போகிறார்களே, அதைப் பற்றித்தான் கவலையாக இருக்கிறது.

கோபால்: அதில் கவலைப்பட என்ன இருக் கிறது? பத்திரிகைக்காரர்கள் தொடர்ந்து எழுதுவதால் உங்கள் இருவர் புகழும் எவ் வளவு உயர்ந்து விட்டது தெரியுமா? இன்று உங்கள் படத்தை வாங்க எத்தனை பேர், நான், நீ என்று போட்டி போட்டுக் கொண்டு நிற்கிறார்கள் தெரியுமா?

ஷங்கர் : அது எப்படியாவது போகட்டும்! நான்கு மாதங்களுக்கு முன் என் கையில் பணம் இல்லாதபோது, நான் ஜயஸ்ரீயோடு சமரசமாகப் போய் விடலாம் என்றுதான் நினைத்தேன். ஆனால் அப்போதிருந்து யாரோ பத்துப்பேர் எனக்கு வாரம் நூறு ரூபாய் அனுப்பி, வழக்கைத் தொடர்ந்து நடத்தும் படி என்னை உற்சாக மூட்டிக்கொண்டிருக் கிறார்கள். ஆகவேதான் ஜயஸ்ரீயின் பயமுறுத் தலுக்கு உட்படுவதில்லையென்று தீர்மானித்து வழக்கைத் தொடர்ந்து நடத்திக் கொண் டிருக்கிறேன்.

கோபால் : நீ அதிர்ஷ்டக்காரன் அப்பா! அதுதான் பத்துப் பேர் உனக்குப் பணம் தொடர்ந்து அனுப்பிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் ஜயஸ்ரீயிடம் பணம் கிடையாதே,

அவள் எப்படி வழக்கைத் தொடர்ந்து நடத்து கிறாள்!

ஷங்கர்: யார் கண்டார்கள்? அவளைத் தான் கேட்க வேண்டும்.

### காட்சி 6

(டைரக்டரும், ஒரு பட விநியோகஸ்தரும்.)

விநியோகஸ்தர்: டைரக்டர் ஸார்! நீங்கள் படம் ஆரம்பித்து ஒரு வருடமாகியும் இன்னும் முடித்தபாடில்லை. எப்பொழுதாவது முடியுங்கள். ஆனால் எனக்கு இல்லை யென்று சொல்லக் கூடாது. எத்தனை லட்சம் கேட்டாலும் சரி, கொடுக்கத் தயாராக இருக்கிறேன். ஆனால் இந்தப் படத்தின் விநியோக உரிமை முழுவதையும் எனக்குத்தான் கொடுக்க வேண்டும்.

டைரக்டர்: உங்களால் எவ்வளவு கொடுக்க முடியும்?

விநியோகஸ்தர்: பத்து லட்சம்.

டைரக்டர்: பத்து லட்சமா? ஆனா, ஆவன்னா, சுனா செட்டியாரே பன்னிரண்டு லட்சம் கொடுப்பதாகச் சொன்னார்!

விநியோகஸ்தர்: சரி, பதினைந்து லட்சம்.

டைரக்டர்: பதினைந்து லட்சமா? ஜகல் புரட்டு விநியோகஸ்தர்களே இருபது லட்சம் கொடுக்க முன் வந்தார்களே!

விநியோகஸ்தர்: சரி, இருபத்தைந்து லட்சம்.

டைரக்டர்: இருபத்தைந்து லட்சமா கானா, நானா, சானா செட்டியாரே இருபத்தெட்டு லட்சம் கொடுப்பதாகச் சொன்னாரே!

விநியோகஸ்தர்: சரி, முப்பது லட்சம். சம்மதமா இல்லையா?

டைரக்டர்: சம்மதம்தான்.

விநியோகஸ்தர்: நீர் நல்ல அதிர்ஷ்டசாலி சார். படம் ஆரம்பித்து ஒரு வருடம் ஆகிறது. இன்னும் படத்தை முடித்தபாடில்லை. இருந்தும் நான் முப்பது லட்சம் கொடுக்கும் அளவுக்கு உம்முடைய படத்துக்கு அத்தனை பிரசாரம் ஆகிவிட்டது. இதற்கு நீர் உம்முடைய கதாநாயகனையும், கதாநாயகியையும்தான் வாழ்த்த வேண்டும். அவர்கள் தொடர்ந்து வழக்காடிக் கொண்டிருக்கிறார்களோ, பத்திரிகைக்காரர்கள் இந்தப் படத்துக்கு ஏக பிரசாரம் செய்து விட்டார்களோ!

டைரக்டர்: அவர்களை எதற்காக வாழ்த்த வேண்டும்? என் சாமர்த்தியத்தை யல்லவா நான் வாழ்த்த வேண்டும்!

விநியோகஸ்தர்: இதில் உம் சாமர்த்தியம் என்ன இருக்கிறது! அந்தப் பெண் அல்லவா சாமர்த்தியமாகக் கட்டின தாலியைக் கழற்ற மாட்டேன் என்று வாதாடிக் கொண்டிருக்கிறாள்!

டைரக்டர்: ஆனால் தொடர்ந்து வழக்காட அவர்களுக்கு ஏது பணம்?

விநியோகஸ்தர்: யார் யாரோ அனுதாபிகள் வாரா வாரம் நூறு நூறுக அனுப்பிக்கொண்டிருக்கிறார்கள் என்று பத்திரிகைகளில் செய்திகள் வந்தனவே!

டைரக்டர்: அந்த அனுதாபிகள் வேறு யாரும் இல்லை. நான்தான் பல பெயர்களில் வாரா வாரம் இருவருக்கும் ஆளுக்கு ஆயிரம் ரூபாய் அனுப்பிக் கொண்டிருக்கிறேன். இது வரையில் இதற்காக லட்சம் ரூபாய் செலவழித்து விட்டேன்.

விநியோகஸ்தர்: எதற்காக?

டைரக்டர்: எதற்காகவா? சாதாரண நாளில் ஐந்து லட்சத்துக்குக்கூடப் போயிருக்காத இந்தப் படத்தை இப்போது முப்பது லட்சம் கொடுத்து வாங்கினீரே, எப்படி? நான் சாமர்த்தியமாக அவர்களைத் தொடர்ந்து வழக்காடச் செய்ததன் காரணமாகத்தான் பத்திரிகைகள் அப்படிப் படத்தைப் பற்றி விழுந்து விழுந்து எழுதின. பத்திரிகைகளுக்கு லட்ச ரூபாய் விளம்பரமாகக் கொடுத்திருந்தால் கூட இத்தனை பிரசாரம் ஆகியிருக்குமா? ஆகவே என் சாமர்த்தியத்தைத்தான் நீங்கள் புகழ வேண்டும்.

(ஐயாஸரியும் ஷங்கரும் வருகிறார்கள்.)

ஐயாஸரி: இல்லை, எங்கள் சாமர்த்தியத்தைத் தான் நீங்கள் புகழ வேண்டும்.

ஷங்கர்: ஆம். எங்கள் சாமர்த்தியத்தைத் தான் நீங்கள் புகழ வேண்டும்.

டைரக்டர்: நீங்கள் சொல்வது எனக்கு விளங்கவில்லையே!

ஐயாஸரி: நீங்கள்தான் தொடர்ந்து பணம் அனுப்பினீர்கள் என்பது எங்களுக்குத் தெரியாது. ஒப்புக் கொள்கிறோம். ஆனால் உங்கள் படப் பிடிப்புக்கு முன்னாலேயே ரிஜிஸ்தர் கல்யாணம் செய்து கொண்டு விட்ட நாங்கள் எங்கள் பெயர் பிரபலமடையத்தான் இந்த வழக்கை ஆரம்பித்தோம். நீங்கள் இந்தப் படத்துக்கு எங்களை ஆளுக்குப் பத்தாயிரத்துக்குத்தான் ஒப்பந்தம் செய்தீர்கள். ஆனால் இதோ இன்னொரு படாதிபதி எங்களை ஆளுக்கு ஐந்து லட்சத்துக்கு ஒப்பந்தம் செய்திருக்கிறார்.

டைரக்டர்: அப்படியா? பரவாயில்லை. உங்களுக்கும் வெற்றி, எனக்கும் வெற்றி.

விநியோகஸ்தர்: எனக்கும்தான் வெற்றி. ஏனெனில் முப்பது லட்சத்துக்கு வாங்கின படத்துக்காக ஏற்கனவே ஒருவர் நாற்பது லட்சம் கொடுத்து விட்டார்.

டைரக்டர்: சரி, ஹைகோர்ட்டில் உங்கள் வழக்குத் தோற்றுவிட்டது. மேற்கொண்டு என்ன செய்யப் போகிறீர்கள்?

ஐயாஸரி: தோற்றால் தோற்கட்டும். இனி அதைப் பற்றி நாங்கள் கவலைப்படப் போவதில்லை.

டைரக்டர்: ஐயோ, அப்படிச் சொல்லாதீர்கள்! என் படம் முடியும்வரை உங்கள் வழக்குத் தொடர்ந்து கொண்டிருக்க வேண்டும். சுப்ரீம் கோர்ட்டில் அப்பீல் செய்யுங்கள். அதற்காக இந்தாருங்கள் ஒரு லட்சம்.

விநியோகஸ்தர்: நானும் ஒரு லட்சம் தருகிறேன். தயவுசெய்து வழக்கை விடாதீர்கள். அப்பீல் செய்யுங்கள்.

ஐயாஸரியும் ஷங்கரும்: சரி.




★ இக்குறியிட்ட கடிதம் ரூ. 15/- பரிசு பெறுகிறது.

பஸ்ஸின் தகுதிச் சான்றிதழ் 30–9–69 அன்றே முடிவடைந்து விட்டது என்றும், பழுது பார்க்கப்படாமலும், தகுதிச் சான்றிதழைப் புதுப்பிக்காமலும் ஓடிக் கொண்டிருந்த பஸ்ஸைத் தான் 19–2–70 அன்று செலுத்திக் கொண்டு செல்லும் பொழுது அதன் 'பிரேக்' சரியாகப் பிடிக்காததால் விபத்து ஏற்பட்டது என்றும் நீதிமன்றத்தில் தமது வாக்குமூலத்தில் அறிவித்துள்ளார் பஸ் டிரைவர். ஒரு பெண்ணின் மரணத்துக்குக் காரணமான இந்த விபத்து சம்பந்தமான வழக்கை விசாரித்த மாகாண மாஜிஸ்திரேட் திரு எஸ். நடராஜன் அவர்கள், தகுதிச் சான்றிதழ் காலாவதியாகியும் பஸ்ஸைப் பழுது பார்க்காமல் ஐந்து மாத காலம் அசட்டைத் தனத்துடன் ஓட்டிக் கொண்டிருந்தது தமக்குப் பேரதிர்ச்சி அளிப்பதாகத் தீர்ப்பில் கூறியுள்ளார்.

அரசாங்கம் தங்கள் போக்குவரத்துத் துறைக்கு மட்டும் விதிகளைத் தளர்த்திக் கொள்வதோடன்றிப் பாமர மக்களின் உயிர்களையும் விபத்துக்குள்ளாக்குகிறது. பஸ் போக்குவரத்து தனியார் துறையில் ஒப்படைக்கப்பட வேண்டும் என்பதற்கு இதை விட வேறு காரணம் வேண்டுமா என்ன?

சென்னை – 11
17–12–70 ஒ. பிரகாசம்

மதுரையிலிருந்து பன்னிரண்டு மைல் தூரத்தில் இருக்கும் கனிமங்கலம் என்னும் கிராமத்துக்குக் கடந்த பல வருடங்களாக இரண்டு கம்பெனிகள் பஸ்களை விட்டு வந்தனர். சரியான நேரங்களில் அந்தப் பஸ்கள் வருவதில்லை. சில நாட்களில் பஸ்களே வராது. ஜனங்கள் மிகவும் சிரமப்பட்டு வந்தனர். பஸ் கட்டணம் அறுபத்துமூன்று பைசாக்கள்.

தற்போது மூன்றாவது கம்பெனி ஒன்று சிட்டி பஸ் விட ஆரம்பித்து, கட்டணத்தை நாற்பத்தைந்து பைசாவாகக் குறைத்து விட்டனர். அதைக் கண்டு மற்ற கம்பெனிகள் தங்கள் கட்டணத்தை நாற்பது பைசாவாகக் குறைத்து விட்டனர். இதனால் ஜனங்களுக்கு மிகவும் சௌகரியம் ஏற்பட்டிருக்கிறது. பஸ் கம்பெனிகள் தங்களுக்குள் போட்டி போட்டுக் கொண்டு கட்டணத்தைக் குறைக்க ஆரம்பித்துவிட்டன. பிரயாணிகளுக்கு வேண்டிய சௌகரியங்கள் செய்துகொடுக்கின்றன. அதில் ஒரு கம்பெனி பஸ்ஸில், வரிச்சியூர் குன்னத்தூரிலிருந்து கனிமங்கலம் பள்ளிக்குப் படிக்கச் செல்லும் பிள்ளைகள் டிக்கட்டில்லாமல் இலவசமாக ஏற்றிச் செல்லப்படுகின்றனர்!

மூன்று மத்தியதர முதலாளிகளுக்குள் ஏற்பட்ட போட்டியின் காரணமாக, பொது மக்கள் அனுபவித்து வரும் சலுகைகளை சோஷலிஸம் என்ற அரசாங்க ஏகபோக முதலாளித்துவத்தை நிலைநாட்டப் பாடுபட்டு வரும் 'முற்போக்கு சோஷலிஸ்ட்கள்' சிறிது சிந்தித்துப் பார்க்கட்டும்.

மதுரை
15–12–70 கபா

நிலையங்கத்தில் ஆங்கிலக் கவிஞரின் கவிதையை மேற்கோள் காட்டி விளக்கியிருப்பது மிகவும் நன்றாக அமைந்துள்ளது. ஆயினும் ராஜாஜியின் ஆங்கிலக் கட்டுரையைத் தமிழாக்கி வெளியிட்டுள்ளதில் ஒரு தவறு நேர்ந்து விட்டது. ''சுப்ரீம் கோர்ட்டின் நீதிபதிகளும் ஏகமனதாக வெளியிட்டுள்ளனர்'' என்று ஓரிடத்தில் தவறாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

நெய்வேலி,
24–12–70 சுப்பிரமணியம்

★ சமீபத்தில் நான் புதுக்கோட்டைக்குச் சென்றிருந்த போது, இந்தச் சம்பவம் நடந்தது. தெரு ஓரமாகப் படுத்திருந்த ஒருவரை இரண்டு பேர் — கிராம அதிகாரிகள் என்று நினைக்கிறேன் — எழுப்பினார்கள்.

''ஏனப்பா, இங்கே படுத்திருக்கிறாய் ?... சாப்பிட்டாயா இல்லையா?'' என்று அன்பொழுக வினவினார்கள்.

''சாப்பாட்டைப் பார்த்தே மூணு நாளாச்சுங்க........!''

''அடடா, அதற்காகவா இப்படிப் படுத்திருக்கே.... எழுந்து வா.... அந்த ஹோட்டலில் நீ வேண்டியதைச் சாப்பிடு.... நாங்கள் பணம் கொடுத்து விடுகிறோம் !''

இப்படியும் சில மனிதர்கள் இருக்கிறார்களே என்று எனக்கு ஒரே ஆச்சரியம். மகிழ்ச்சி. அந்த ஆள் வயிறு புடைக்கச் சாப்பிட்டு முடித்ததும் அவர்களை நன்றிப் பெருக்கோடு பார்த்தான். அப்போதுதான் அந்தச் சுவாரசியமான நிகழ்ச்சியே நடந்தது.

''இந்தாப்பா, நீ ஒரு உதவி செய்யணுமே'' என்று மெல்ல இழுத்தார் ஒருவர்.

''என்ன சொல்லுங்க...செய்யக் காத்துக் கிட்டிருக்கேன்'' என்றான் செஞ்சோற்றுக் கடன் தீர்க்க.

'' ஒண்ணுமில்லே.... நீ ஆஸ்பத்திரிக்கு வா..... குடும்பக் கட்டுப்பாடு ஆபரேஷன் செய்து கொள்.... முப்பது ரூபாய் பணம் தருவார்கள்........ !''

''ரெண்டு வாரங்களுக்கு முன்னே தானே, நான் தேவகோட்டையிலே ஆபரேஷன் செஞ்சிக்கிட்டேன்'' என்று அவன் கூறிய போது அந்த இருவரின் முகத்திலும் அசடு வழிந்ததைப் பார்க்க வேண்டுமே !

திருவாரூர்
17–12–70 த. செல்லம்

தாஜ்மகால் ஹோட்டலைப் பற்றிய தகவல்களில் Rendezvous என்ற வார்த்தை 'ரெண்டஸ்வஸ்' என்று தமிழில் உள்ளது. அதன் உச்சரிப்பு 'ரெண்டவூ' என்றிருக்க வேண்டும்.

சென்னை – 4
17–12–70 லட்சுமணன்

ஐந்தே
காசு
போதும்
உங்கள்
குடும்பம்
பெருகாமல்
தடுக்க!







உயர்தர ரப்பரினாலான கருத்தடைச் சாதனம்

**குடும்பக் கட்டுப்பாட்டிற்கு**

15 காசுக்கு 3

அரசாங்க ஆதரவினால் குறைந்த விலை

சுலபமாகத் தள்ளிப் போடலாம்.

நிரோத் (காண்டோம்) உயர்தர ரப்பரினாலான கருத்தடைச் சாதனம் ஆண்களுக்கானது. எளிமையான, நிறைவற்ற நிரோத் உலகமெங்கும் உபயோகிக்கப்படுகிறது. இதை உபயோகிப்போரின் தேகநலம் பாதிக்கப்படுவதில்லை. நிரோத் எங்கும் கிடைக்கும்

நிரோத், வீட்டுச் சாமான்கள் விற்கும் கடை, மருந்துக் கடை, வெற்றிலைப் பாக்குக் கடை ஆகியவற்றில் கிடைக்கும்.

வேண்டுமென்றபோது மட்டுமே பேறு...

வேண்டுமென்றபோது மட்டுமே இன்று மக்கட்பேற்றை ஏற்படுத்திக் கொள்ளலாம். இதற்கு நிரோத் உதவும்.

தாய் சேய் இருவரின் தேகநலம்...

குழந்தைகள் சரியான வளர்ச்சி பெற, முதல் மூன்று நான்கு வருடங்கள் அவர்களுக்கு விசேஷமான பராமரிப்பு தேவை என்று வைத்தியர்கள் கூறுகின்றனர். பேற்றில் இழந்த தேக வலுவை மீண்டும் பெற தாய்க்கும் சிறிது காலம் பிடிக்கும். நிரோத் உபயோகிப்பதால், அடுத்த பேற்றைத்

davp 70/67

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

# உட்புறங்களுக்கும், வெளிப்புறங்களுக்கும் ஈடிணையற்ற அழகிற்கும், நிரந்தரத்தன்மைக்கும்...

**ஸில்விக்ரீட்**

ஏஸிஸி வெள்ளை சிமெண்ட்



**ஸில்விக்ரீட் ஏஸிஸி** வெள்ளை சிமெண்டை கண்கவர் பாணிகளிலும், வண்ணங்களிலும் அமைத்துக் கொள்ளலாம்; அதைக் கொண்டு டெகோரேடிவ் பேனல்களையும், டைல் அல்லது டெர்ராஸோ தரைகளையும், ஜாலிகளையும், கொடிவீடுகளையும் சுலபமாக அமைத்துக் கொள்ளலாம்.

அசல் போர்ட்லாந்து சிமெண்டின் உறுதியும், நீடித்து நிற்கும் தன்மையும் உடையதாக இருப்பதனால், அது நிரந்தரமானதாக விளங்குகிறது.

**ஸில்விக்ரீட்** எவ்வளவு வேண்டுமானாலும், அருகிலுள்ள சிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆஃப் இந்தியா லிமிடெட் கிளையிலோ, அவர்களுடைய விநியோகஸ்தர்களிடமோ கிடைக்கிறது.

**ஸ்னோஸெம்** மற்றும் **கலர்க்ரீட்டின்** தயாரிப்பில் மூலப் பொருளாக இருப்பது **ஸில்விக்ரீட்.**

**ஏஸிஸி** தரத்தில் உயர்ந்த தயாரிப்புகளுக்கு நீங்கள் பெறும் உத்தரவாதம்

**தி அஸோஸியேடெட் சிமெண்ட் கம்பெனீஸ் லிமிடெட்.**

தி சிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆஃப் இந்தியா லிமிடெட்,

SISTA'S-CMI-480 TM

REGISTERED No M. 4392
Registered as a Newspaper in Ceylon